ௐ

ஸ்ரீ லோஷ்டதேவர் எழுதிய

**ஸ்ரீ தீனுக்ரந்தனம்**

என்னும்

# ஸ்ரீ காஶீ விஶ்வேஶ்வர ஸ்தோத்ரம்



**காஶீ - ஸ்ரீ விஶ்வேஶ்வரர் கோவில்**

श्रीकामकोटिग्रन्थावलिः २

॥ श्रीः ॥

श्रीचन्द्रमौळीश्वराय नमः

श्रीलोष्टदेवकृतम्

# श्रीदीनाक्रन्दनम्

नाम

# श्रीकाशीविश्वेश्वरस्तोत्रम्



श्रीकामकोटिर्विजयते

कुम्भघोणस्थ

श्रीकामकोटिकोशस्थानेन

प्रकाशितम्

मूल्यम् अष्ट आणकाः ]    [ कापिस्ट्

1943

ௐ

ஸ்ரீ லோஷ்டதேவர் எழுதிய
**ஸ்ரீ தீனக்ரந்தனம்**
என்னும்

# ஸ்ரீ காஶீ விஶ்வேஶ்வர ஸ்தோத்ரம்

**ஸ்ரீ A.S. நடராஜ அய்யர்,** B.A., M.L.,
எழுதிய தமிழ் அனுவாதத்துடனும்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள்**
அருளிய திவ்விய ஸ்ரீமுகத்துடனும்

**Dr. V. ராகவன்,** M.A., Ph. D.,
அவர்களுடைய முன்னுரையுடனும்
பிரசுரிக்கப்பட்டது


## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

ஸ்ரீ சங்கர மடம், கும்பகோணம்
1943


 [விலை அணா 8



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
**ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

श्री:

मुद्रा

## श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकरभगवत्पादप्रतिष्ठित श्रीकाञ्चीकामकोटिपीठाधिप जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपाद: क्रियते नारायणस्मृति:

ஸ்ரீ லோஷ்டதேவ கவி எழுதிய தீனுக்ரந்தனம் என்னும் இவ்வுத்தம ஸ்தோத்திரத்தின் பெருமையை ஜன்மாந்தரங்களில் செய்த புண்ணிய பலன்களாலும், இந்தப் பிறவியின் நற்செய்கைகளின் பாக்கிய வசத்தாலும் புண்ணியாத்மாக்கள் அறியக் கூடும். இதில் கவி கூறும் எல்லா விஷயங்களும் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் உணரப்பட்டுவரக்கூடியவைதான். இந்த ஸ்துதியில் ஸ்ரீலோஷ்டதேவருடைய ஆத்மானுபவம் தெளிவாகக் காணக்கிடக்கின்றது.

இந்த மஹான் தன் வாழ்நாள் முழுவதும் தான் நேசித்து வந்த கவிதையை விலக்கிக் காஷாயம் பூண்டு, ஏகாக்கிர சித்தராய், பாபங்களை எரிக்கும் மகாச்மசானமாகிய காசீ க்ஷேத்திரத்தில், மோக்ஷ சாம்ராஜ்யத்தை உடனே அளிக்கக் கூடிய விசாலாக்ஷீ சமேதரான ஸ்ரீ விச்வேச்வரரின் சந்நிதானத்தில் பக்திரஸப் பெருக்குடன் கதறுகிறார்.

ஸ்ரீ லோஷ்ட தேவர் ஆரம்பத்தில் இவ்வுலக வாழ்க்கையில் முற்றும் ஈடுபட்டிருந்தார். சுகங்களை அனுபவித்தார். ஆனால் மனவமைதியைப் பெறவில்லை. பிறகு காஷாயம் அணிந்து உயர்ந்த இன்பத்தைப் பெற்றார். அவரது வாழ்க்கையின் அனுபவத்தை யொட்டியே அவருடைய ஸ்தோத்திரமும் ஆரம்பத்திலிருந்து மேலே செல்லச் செல்ல பக்திமேலீட்டையும் கவித்திறமையையும், உணர்ச்சிப் பெருக்கையும், அர்த்தபுஷ்டியையும் அதிகமாகக்கொண்டு சோபிக்கின்றது.

"பாபத்தைச் செய்து உடலைப் போஷித்தேன். ஏழைகளைக் கருதினேன் இல்லை. பெண்களின் கால்களில் விழுந்தேன். ஆசிரியர்களை வணங்கினேன் இல்லை. செல்வத்தில் ஆசை வைத்தேன். புண்ணியத்தை வெறுத்தேன். ஆதலால் வருந்துகின்றேன். நீரே கதி," என்கிறார் (சுலோகம் 48).

"நான் காவியம் இயற்றுவதை விட்டேன். ஈசா, உம்முடைய முன்னிலையில் ஏழ்மையுடன் பிதற்றுகின்றேன்," என்கிறார் (சுலோகம் 50).

பிறகு, "காசி க்ஷேத்திரத்தில் கங்கையின் மணலில் அரசர்களைப்பற்றிய சாடு வார்த்தைகளை இயற்றுவதை விட்டுப் பசுபதியைக் குறித்துக் கதறுவதென்ற கடுமையான விரதத்தை ஏற்றுக் கொண்டேன்," (சுலோகம் 51) என்று சொல்லிவிட்டு,

"உயர்ந்த வம்சத்தில் பிறந்து கவிதைக் கடலைக்கடந்து, சக்திக்கேற்ப ஏழைகளுக்குத் தானம் செய்து, சுகங்களையும் அனுபவித்து, உண்மை என்னவென்பதை அறிந்து, ஸந்நியாஸம் ஏற்று, ஸம்ஸாரத்தை வெறுத்துக் காசியில் நிம்மதியுடன் இனிது வாழ்கின்றேன்" (சுலோகம் 52) என்று கூறித் தமது மனவமைதியைக் காண்பிக்கின்றார்.

மேலும் சாதாரணமாகக் கேள்விப்பட முடியாததானதொரு ஆச்சரியமான பிரதிக்ஞையையும் செய்கின்றார். "எதிரிகள் பொறாமையடையக் காரணமாகிய கவிதையென்னும் காதலி, நான் ஸந்யாஸம் ஏற்றுக்கொண்ட பிறகும், என்னை வந்து அணைகின்றாள், என்பதினால், பிரம்மசரியத்தை விட்ட தோஷம் சிறிது ஏற்பட்டுத்தான் விடுகின்றது. ஆதலால், விச்வேச்வரா, உம்மெதிரில் ஆணையிடுகிறேன், இனி இவளை என்றும் மனதினாலும் நினையேன். இதுவரை செய்த குற்றத்தை மட்டும் மன்னித்து விடும். " (சுலோகம 53), என்று பொருள்படும் இந்த சுலோகத்தின் பெருமையை ஆதிசேஷனும் கூறமுடியாது.

உலக வாழ்க்கையை வெறுத்துக் கவிதா ஸந்யாஸமும் செய்கின்றேன் என்ற பிரதிக்ஞை எவ்வளவு கடினமானதென்பது கவிகளுக்கு மட்டுமே தெரியும்.

காளிதாஸ மகாகவி சாகுந்தலத்தின் முடிவில் கீழ்க்காணும் சுலோகத்தில் இதே கருத்தை வெளியிட்டிருக்கிறார்:

**प्रवर्ततां प्रकृतिहिताय पार्थिवः सरस्वती श्रुतिमहतां महीयताम् ।**
**ममापि च क्षपयतु नीललोहितः पुनर्भवं परिगतशक्तिरात्मभूः ॥**

**ப்ரவர்த்ததாம் ப்ரக்ருதிஹிதாய பார்தி²வः ஸரஸ்வதீ ஶ்ருதிமஹதாம் மஹீயதாம்।**
**மமாபி ச க்ஷபயது நீலலோஹிதः புனர்ப⁴வம் பரிக³தஶக்திராத்மபூ⁴ः ॥**

காவ்யலக்ஷணங்கள் முற்றிலும் அமைந்துள்ள தமது கிரந்தத்தைப் "பிதற்றல்" உயர்ந்தக் என்று லோஷ்டதேவர் குறிப்பது அவருடைய வைராக்கியத்தைக் காட்டுகின்றது. கவிதையினால் ஏற்படும் புகழையும் அவர் வெறுத்தார் என்பதையும் காட்டுகின்றது.

லோஷ்டதேவரைப் போலவே ஈசுவரனை நோக்கிக் கதறும் இயல்பு ஒவ்வொருவருடைய மனதிலும் குடிகொண்டிருக்கின்றது. ஆனால் ஸம்ஸார மோஹம் அதை மறைத்திருக்கின்றது. இந்நூலைப் படிக்கும் எல்லோரும் லோஷ்டதேவரின் உண்மை நிலையை உணர்ந்து, தாமும் அந்நிலையைப் பெற்று, விச்வேசுவரரிடம் கதறி, லோஷ்டதேவர் விச்வேசுவரரிடம் பெற்ற, பெறுவதற்கரியதான அருளைப் பெறுவார்களாக!

**प्रकृतनिवासस्थानम्, महाकाळिगुडिरे**
**सुभानु सं० ज्येष्ठशुक्लचतुर्दशी** **नारायणस्मृतिः ।**

॥ ओम् ॥

॥ ஓம் ॥

# முன்னுரை

## "नमः शिवाय च शिवतराय च"

### நமஃ ஶிவாய ச ஶிவதராய ச

என்று வேதம் வணங்கியதைப் பின்பற்றி, சிவனுடைய வழிபாடு இந்நாட்டில் எங்குமே பரவியிருந்தும், முக்யமாய்க் காஸ்மீரதேசத்திலும் தென்னுட்டிலும் இந்த சிவோபாஸனை த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைத மத பேதங்களால் பல வைசித்ர்யங்களை அடைந்து ஓங்கிற்று. "ப்ரத்யபிஜ்ஞை" என்ற அத்வைதம் செழித்த காஸ்மீரத்தில் கணக்கில்லாத அரிய சிவ ஸ்தோத்ரங்கள் எழுந்தன. இவற்றில் மிகவும் சிறப்பு வாய்ந்தது ஆசார்ய அபிநவகுப்தரின் குருவான **உத்பலதேவர்** இயற்றிய '**சிவஸ்தோத்ராவளி**' என்பது. ப்ரத்யபிஜ்ஞை வளர்ந்து வந்த காஸ்மீரத்தில் நம் ஆசார்யபகவத்பாதர்களின் அத்வைத மதம் புகுந்ததும், அதைப் பின்பற்றி நூல் இயற்றியவர்களில் ஒருவர் **ரம்யதேவர்** என்றவர். கி.பி. 1127 முதல் 1149 வரை காஸ்மீரத்தை ஆண்ட ஜயஸிம்ஹ ராஜனுக்கு 'லங்ககன்' (அதாவது அலங்காரன்) என்றும், 'மங்ககன்' என்றும் இரு ஸஹோதரர் மந்த்ரிகளாயிருந்தனர். மங்ககன் கி.பி. 1140 - இல் திரிபுரதஹன விருத்தாந்தத்தை **ஸ்ரீகண்ட சரிதம்** எனுங் காவ்யமாய் எழுதினுர். இதன் இறுதியில் 25 - ம் ஸர்கத்தில் தமையன் லங்ககனைச் சூழ்ந்திருந்த பெரிய வித்வத் ஸபையில், மங்ககன் தன் காவ்யத்தை அரங்கேற்றினதாகச் சொல் லியிருக்கிறுர். அந்த ஸந்தர்பத்தில், லங்ககனின் ஸபையில் உள்ள வித்வான்களை ஒவ்வொருவராக வர்ணிக்கும் போது ரம்யதேவர் என்றவரை மூன்று ச்லோகங்க ளில் (31-33) மங்ககன் புகழ்கிறுர். இதிலிருந்து நமக்குத் தெரியவருகிறது யாதென்றல்: ரம்யதேவர் ப்ரபல அத்வைத வேதாந்த ஆசார்யராய் இருந்தார்; ஸந்நியாஸி; நித்யம் வேதாந்த உபந்யாஸம் செய்பவர்; உபநிஷத்தின் பாகங்களான கடவல்லிகளுக்கும், அவ்யயாத்ம பகவானின் சிஷ்யரான விமுக்தாத்ம பகவானின் **இஷ்டஸித்தி** என்னும் அத்வைத க்ரந்தத்திற்கும் வியாக்கியானம் எழுதியவர்.

**यस्य व्यनक्ति काषायग्रहमारक्तया रुचा ।**
**नित्योपन्याससंक्रान्तवेदान्तार्थ इवाधरः ॥**
**नीत्वा सफलतां वल्लीरिष्टसिद्धिं विवृण्वता ।**
**श्रुतीनां पथि शिष्येषु येन कल्पद्रुमायितम् ॥**
**निस्तुषीकृतवैदुष्यं स्मयमात्सर्यसंहृतेः ।**
**घृतप्रणतिपारम्यं रम्यदेवं तमैक्षत ॥**

**श्रीकण्ठचरितम् २५ सर्ग : ३१-३३ श्लोकाः**

**யஸ்ய வ்யனக்தி காஷாயக்³ரஹமாரக்தயா ருசா ।**
**நித்யோபந்யாஸஸங்க்ராந்தவேதா³ந்தார்த² இவாத⁴ர꞉ ॥**
**நீத்வா ஸப²லதாம் வல்லீரிஷ்டஸித்³தி⁴ம் விவ்ருண்வதா ।**
**ஶ்ருதீனாம் பதி² ஶிஷ்யேஷு யேன கல்பத்³ருமாயிதம் ॥**
**நிஸ்துஷீக்ருதவைது³ஷ்யம் ஸ்மயமாத்ஸர்யஸம்ஹ்ருதே꞉ ।**
**க்⁴ருதப்ரணதிபாரம்யம் ரம்யதே³வம் தமைக்ஷத ॥**

**ஸ்ரீகண்ட²ஞ்சரிதம் 25 ஸர்க³ : 31-33 ஶ்லோகா꞉**

இந்த ரம்யதேவரின் மைந்தர் **லோஷ்டதேவர்**; இவருக்கு ஆறு பாஷைகளில் இருந்த பாண்டித்யத்தையும் நிர்தோஷமான கவிதையையும்பற்றி மங்ககன் மூன்று சுலோகங்கள் சொல்லிப் பின்பு இந்த லோஷ்டதேவர் லங்ககனைப் புகழ்ந்த பல ச்லோகங்களைச் சொல்லுகிறார். இப்படித் தம் கவிதைக்காகப் புகழப்பட்ட லோஷ்ட தேவர் என்னென்ன காவ்யங்களை இயற்றினார் என்று நமக்குத் தெரியவில்லை.

**वाग्देवतालिनीलीलाधुतपक्षतिचातुरीम् ।**
**वदनाम्बुरुहे यस्य भाषाः षडधिशेरते ॥**

**खलानां यत्प्रबन्धेषु दृढव्युत्पत्तिवर्मसु ।**
**प्रोद्यच्चोद्यमया दूरे कुण्ठिता इव पत्रिणः ॥**

**कतिचिल्लोष्टदेवस्य तस्येति मुखतोऽशृणोत् ।**
**श्रीलङ्ककं प्रति प्रोतचारुचाटुरसा गिरः ॥**

**श्रीकण्ठचरितम् २५. ३८-३६.**

**வாக்³தே³வதாலிநீலீலாது⁴தபக்ஷதிசாதுரீம் ।**
**வத³னம்பு³ருஹே யஸ்ய பா⁴ஷா꞉ ஷட³தி⁴ஶேரதே ॥**

**க²லானும் யத்ப்ரப³ந்தே⁴ஷு த்³ருட⁴வ்யுத்பத்திவர்மஸு ।**
**ப்ரோத்³யச்சோத்³யமயா தூ³ரே குண்டி²தா இவ பத்ரிண꞉ ॥**

**கதிசில்லோஷ்டதே³வஸ்ய தஸ்யேதி முக²தோ(அ)ஶ்ருணோத் ।**
**ஸ்ரீலங்ககம் ப்ரதி ப்ரோதசாருசாடுரஸா கி³ர꞉ ॥**

**ஸ்ரீகண்ட²சரிதம் 25। 38-36।**

கி.பி.1205-இல் ஸ்ரீதரதாஸன் தொகுத்த **'ஸதுக்திகர்ணாமிருத'** த்திலும், இதற்குச் சற்று முன்னால் தொகுக் கப்பட்ட **'ஜல்ஹண ஸூக்திமுக்தாவளி'** யிலும் **லோஷ்ட ஸர்வஜ்ஞர்** என்ற கவி யொருவருடைய தனி சுலோகங்கள் சில காணப்படுகின்றன. ஒரு அனுஷ்டுபில், இந்த லோஷ்ட ஸர்வஜ்ஞர் தான் பாண மகாகவியை மிஞ்சியதாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார். மற்றொன்றில், சார்தூல

விக்ரீடிதத்தில், கர்வத்தாலும், த்வேஷத்தாலும், முட்டாள்தனத்தாலும், ஸபை வியாபித்து நிற்க, ஸபையின் சுவரைக் கூவி, 'நீராவது நம் கவிதையைக் கேட்டுப் புகழும்,' என்கிறுர். வஸந்ததிலகை யொன்றில், வர்ஷா காலமேகம் இருண்ட இரவுகளில், கையில் மின்னல் என்ற விளக்குகளைக் கொண்டு, கர்ஜனை செய்து கொண்டு, 'எங்கே, பிரிவடைந்த காதலர் இன்னும் உயிர் தரித்திருக்கிறுர்' என்று தேடுவதுபோலிருக்கின்றதென்ற அழகிய உத்ப்ரேக்ஷை யொன்றைச் செய்கிறுர். இந்த லோஷ்ட ஸர்வஜ்ஞரும், ரம்யதேவரின் புத்ரர் என்றும், மஹாகவி என்றும், மங்ககன் புகழ்ந்த லோஷ்டதேவரும் ஒருவரே என்று சொல்லலாம்.

'தந்தை வேதாந்தியாகிக் காஷாயம் பூண்டார்; மைந்தன் எப்பொழுதும் காவ்யமென்ற காதலியோடு விளையாடிக்கொண்டே இருந்தான்,' என்ற அபவாதம் கூடாதென்றே, தன் கடைசிக் காலத்தில் லோஷ்டதேவர் முக்தி க்ஷேத்ரமான காசியை அடைந்தார். ஸர்வ பிராபஞ்சிக விஷயங்களும், ஸமஸ்த துரிதங்களும் எரிந்து சாம்பலாகும் அந்த மஹாச்மசானத்தில், ஆத்மாவின் நிஜ ஸ்வரூபமான ஆனந்தம் வியக்தமாகும் அந்த ஆனந்தகானனத்தில், விச்வேச்வரனைப் பஜித்துக் கொண்டு, தன் பெயருக்கு ஒப்ப (லோஷ்டம் - மண்ணாங்கட்டி)த் துறந்து, விரக்தராகி, ஞானியுமாகித் தன் வாழ் நாட்களைக் கழித்தார்.* கவனம் செய்வதில் மிகவும் ஈடுபட்டிருந்தவராகையால், என்ன முயன்றுலும் அந்தச் சபலம் இங்கும் தன்னை விடாமல், அவ்வப்போது தெரியாமல் தனியே கள்ளக் காதலிபோல் தன்னிடம் வந்துவிட்டுப் போகிறுள் என்று ஓரிடத்தில் சொல்லுகிறுர்.† இப்படிப் பழைய வாஸனை தோன்றினுலும் அதை இதுகாறும் விநியோகஞ் செய்தபடி சிறு விஷயங்களிலோ, தன் காவ்ய சில்ப சக்தியைக் காட்டவேண்டும் என்ற அபிமானத்திற்காகவோ கையாளாமல், சிவபரமான ஸ்துதியில் உபயோகஞ்செய்வது என்ற பரிஹாரத்தைச் செய்து, தன்னையும் தன் வாழ்க்கையையும் கிருதார்த்தம் செய்து கொண்டார். இந்த வழியில் அவர் செய்த சிவஸ்தோத்திரங்களில் ஒன்றே **தீனுக்ரந்தனம்** (ஏழையின் கதறல்) என்று இங்கு வெளியிட்டிருக்கிறது.

---

* **एतत् तीव्रं व्रतमुपचित्तम्- ஈர்ஷ்யாயை பரவாதி³னும்** -
51- வது சுலோகத்தைப் பார்க்க.

† **ईर्ष्यायै परवादिनाम् - ஈர்ஷ்யாயை பரவாதி³னும்** -
53 - வது சுலோகத்தைப் பார்க்க.

---

நம் தென்னுட்டில் வழக்கமாய் ஸ்தோத்திரங்கள் படித்தும் சொல்லியும் வருபவருக்கு ஸாதாரணமாய் பழக்கமிராதவையும், காஶ்மீரத்திலும் இதர இடங்களிலும் இயற்றப்பட்டவையுமான சில அரிய ஸ்தோத்திரங்களை அறிமுகப் படுத்த வேண்டும் என்று எண்ணி, நான் சில வருஷங்களுக்கு முன்பு வெளியிட்ட ஸ்தோத்ரக்கோவையில், உத்பலதேவரின் சிவஸ்தோத்ராவளி, லோஷ்டதேவரின் தீனுக்ரந்தனம் முதலியவற்றிலிருந்து சில பாகங்களைப் பொறுக்கிச் சேர்த்தேன். நான் தீனுக்ரந்தனத்திலிருந்து எடுத்திருந்த ஶ்லோகம் 49-ல் பக்தரொருவருக்கு ஏற்பட்ட பெரும் ஈடுபாட்டினுல் இப்பொழுது அந்த ஸ்தோத்ரம் முழுவதும் தமிழ் மொழி

பெயர்ப்புடன் வெளிவருகிறது வருகிறது என்பது என் எண்ணம் நிறைவேறியதற்கு அடையாளமாகும். இந்த தீனுக்ரந்தன. ஸ்தோத்திரம் 'காவ்யமாலா' குச்சகங்களில் 6-வது பாகத்தில் 21-30 பக்கங்களில் 1890-இல் அச்சாயிற்று. அப் பதிப்பை ஆதாரமாகக் கொண்டே இந்த ஸ்தோத்திரம் இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது. தமிழ் மொழிபெயர்ப்பு குறிப்புக்களுடன் பிரம்மஸ்ரீ A. S. நடராஜ அய்யர், B.A., M.L., அவர்களால் செய்யப்பட்டி ருக்கிறது.

லோஷ்டதேவரின் பக்தியின் உயர்வும், பாவத்தின் சுத்தியும், கவிதையின் ருஜுவாயும் தெளிவாயுமுள் சைலியும், இந்த ஸ்தோத்திரத்தில் நன்கு அனுபவிக் கப்படுகின்றன. முக்யமாய் 43 - வது சுலோகத்தில் இவர் தன் பக்தியைக் காதலாய்க்கொண்டு சிவனிடம் நாயிகா பாவத்தில் புலம்பியது மிகவும் ஈச்வரப் பித்தருக்கு ரஸனீயமானது. இந்தத் தெய்வக் காதலின் பித்து நம்மையும் பிடித்து ஆட்டுமாக!

1-6-43]

**வே. ராகவன்.**
(Department of Sanskrit, Madras University.)

---

**ஸ்ரீ குருப்யோ நம:**

**घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः**
**पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।**
**वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा**
**पदाम्भोज शंभोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥**

**க⁴டோ வா ம்ருத்பிண்டோ³(அ)ப்யணுரபி ச தூ⁴மோ(அ)க்³நிரசல:**
**படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோ⁴ரஶமனம் ।**
**வ்ருதா² கண்ட²க்ஷோப⁴ம் வஹஸி தரஸா தர்கவசஸா**
**பதா³ம்போ⁴ஜ ஶம்போ⁴ர்ப⁴ஜ பரமஸௌக்²யம் வ்ரஜ ஸுதீ⁴: ॥**

என்று ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் சிவானந்தலஹரீயிலே உபதேசித்திருக்கிறுர்கள். இதைப்பற்றிக் கூறும்போது, நமது ஆசார்யர்களும், "குடம் மண்ணிலிருந்து உண்டா யிற்று; புகை நெருப்பிலிருந்து உண்டாயிற்று; வேஷ்டி நூலிலிருந்து உண்டாயிற்று என்று சொல்லுகிறேம். இவைகளெல்லாம் கடைசி காலத்தில் நம்மை இழுக்க வருபவனைத் தடுக்குமா? வேகமாகப் பேசுவதால் என்ன பிரயோஜனம்? அது அவனைத் தடுக்குமா? பின் எது தான் அவன் வந்தால் நில் என்று சொல்லும்; சிவனுடைய பாதாம்புஜத்தைச் சொல். அது பரம ஸௌக்கியத்தை உண்டாக்கும். எல்லா சாஸ்திரங்களுக்கும் பிரயோஜனம் பக்தி பண்ணுவதுதான்," என்று மேலுள்ள சுலோகத்தின் பொருளை விளக்கியுள்ளார்கள். இவ்வாறு பரமசிவனுடைய பாதார விந்தங்களில் பக்தி பண்ணி அவைகளே தஞ்சம் என்று இருக்க விரும்புவோர்களு க்கு ஸ்ரீ விச்வேச்வரரைப்பற்றிய இந்த ஸ்தோத்ரம் சிறந்ததொரு ஸாதனமாகும்

## ஸம்ஸாரம் என்னும் நோய்க்கு மருந்து

நாம் எல்லோரும் ஸம்ஸாரத்தில் அலைந்து களைத்துப்போயிருக்கிறோம். ‘அவித்யை’ என்னும் ராக்ஷஸி நம்மைப் பிடித்திருக்கிறாள். இவளை வெருட்டியடித்து, விவேகம் என்னும் மருந்துகொண்டு ஸம்ஸார வெக்கையைத் தணிப்பவர் சிவபெருமான் ஒருவரே.

## अविद्या सह कार्येण विद्यया हातव्या इति श्रुतिस्मृतिन्यायेभ्यः अवगम्यते (गीताभाष्ये १३-२)

**அவித்³யா ஸஹ கார்யேண வித்³யயா ஹாதவ்யா இதி ஶ்ருதிஸ்ம்ருதிந்யாயேப்⁴ய: அவக³ம்யதே**
**(கீ³தாபா⁴ஷ்யே 13-2)**

“அவித்யையும் அதன் சேஷ்டைகளையும் வித்யையால் (விவேகத்தால்) போக்க வேண்டும் என்பதை வேதங்கள் ஸ்ம்ருதிகள் யுக்திவாதம் இவற்றால் தெரிந்து கொள்கிறோம்” என்று ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

கர்ப்பம் உண்டாவதிலுள்ள இழிவு, கர்ப்பவாஸத்தில் படும்பாடு, கர்ப்பத்தினின் றும் வெளிவந்ததும் சிசு அடையும் மூடத்தனம், சிறுவயத்தை மிருகத்தைப்போலக் கழிப்பது, யௌவன பருவத்துச் சேஷ்டைகள், கல்யாணம் என்னும் கொடுமை, மனைவி மக்களுக்காகப் படும்பாடு - இவற்றையெல்லாம் அருவருப்புத் தோன்றும் விதத்திலே கவி வர்ணித்திருக்கிறார். இதற்குக்காரணம்,

## विरक्तस्य हि संसारात् भगवत् - तत्त्वज्ञाने अधिकारः न अन्यस्य (गीताभाष्ये १५-१)

**விரக்தஸ்ய ஹி ஸம்ஸாராத் ப⁴க³வத் - தத்த்வஜ்ஞானே அதி⁴கார:**
**ந அன்யஸ்ய (கீ³தாபா⁴ஷ்யே 15-1)**

'ஸம்ஸாரத்தில் விரக்தியடைந்தவனுக்கே பகவத்தத்த்வ - ஞானத்தில் அதிகாரம் உண்டு, மற்றவர்களுக்கு இல்லை' என்று ஸ்ரீ ஆதி ஆசார்யர்கள் கூறியுள்ளார்கள்.

## யமபயமும் சரணாகதியும்

நமக்கு யமனிடம் உண்டாகும் பயத்தையும், யமபடர்களால் நரகங்களிலே அடையும் துன்பங்களையும் கவி வர்ணித்துக் கூறி, இந்த பயம் நீங்குவதற்கு உபாயம் பரமசிவனைச் சரணமடைவதே என்று 17, 19,29,36 - வது சுலோகங்களில் நன்றாக விளக்குகிறார். சரணமடைந்த பின் கவலையில்லை என்று (**अत्रोचितं हर चर स्वकृपालुतायाः**) (**அத்ரோசிதம் ஹர சர ஸ்வக்ருபாலுதாயா:**) (சு.29) உறுதி கொள் கிறார். சிவபக்தியில் உயர்ந்த நாயிகா - நாயக பாவத்தை 43, 44 - வது சுலோகங்களில் கவி அடைந்திருக்கிறார்

**शास्त्राचार्योपदेशशमदमादिसंस्कृतं मनः आत्मदर्शने कारणम् (गीताभाष्ये २-२१)**

**ஶாஸ்த்ராசார்யோபதே³ஶஶமத³மாதி³ஸம்ஸ்க்ருதம் மனஃ ஆத்மத³ர்ஶனே காரணம் (கீ³தாபா⁴ஷ்யே 2-21)**

சமம், தமம் இவைகளால் பரிசுத்தமான மனதே ஆத்மதரிசனத்திற்குக் கருவியாகும். அந்த ஞானமோ, சமம், தமம் என்னும் குணங்களோ தன்னிடம் இல்லை என்று கூறி, ஸந்யாஸம் பூண்டு பரமசிவனையே சரணமாகக்கொண்டு, 'ஸ்ரீ காசீ க்ஷேத்ரத்தை விட்டு அகலுவதில்லை' என்ற க்ஷேத்ர ஸந்யாஸ விரதத்தை மேற்கொண்டு, இந்த தீனுக்ரந்தன ஸ்தோத்ரத்தைச் செய்து முடித்து, "இதுவும் காவியம் இயற்றுவதிலே ஒருவகைதானே, எல்லாக் கருமங்களையும் துறந்த ஸந்யாஸிக்கு இதுவும் ஒரு தோஷமாகும்," என்று இனி காவியம் இயற்றுவதில்லை என்று பிரதிக்ஞை செய்து, மோக்ஷத்தையே விரும்பி,

**तस्मात् विशेषितस्य अविक्रियस्यात्मदर्शिनः विदुषः मुमुक्षोश्च सर्वकर्मसंन्याले अधिकारः (गीताभाष्ये २-२१)**

**தஸ்மாத் விஶேஷிதஸ்ய அவிக்ரியஸ்யாத்மத³ர்ஶினஃ விது³ஷஃ முமுக்ஷோஶ்ச ஸர்வகர்மஸம்ந்யாலே அதி⁴காரஃ (கீ³தாபா⁴ஷ்யே 2-21)**

ஆகவே அவிகாரியான ஆத்மாவை (பிரும்மத்தை)க் காணும் ஞானிக்கும் மோக்ஷத் தை நாடுவோனுக்கும் ஸகல கர்மங்களையும் துறப்பதிலேதான் அதிகாரம்" -

**विदुषः त्यक्तैशणस्य स्थितप्रज्ञस्य यतेः एव मोक्षप्राप्तिः (गीताभाष्ये २-७०)**

**- விது³ஷஃ த்யக்தைஶ்ணஸ்ய ஸ்தி²தப்ரஜ்ஞஸ்ய யதேஃ ஏவ மோக்ஷப்ராப்திஃ (கீ³தாபா⁴ஷ்யே 2-70)**

என்ற ஆதி ஆசார்யர்களின் வாக்குகளின்படி, எல்லாக் கருமங்களையும் துறந்த ஸந்யாஸியாகக் காசியிலே விளங்கி, ஸ்ரீ விச்வேச்வர கிருபை பெருகும் அவிமுக்த ஸ்தல வாஸத்தால் மோக்ஷமடைந்தார். இவருடைய பெருமைகளை ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காம கோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சங்கராசார்யரவர்கள் இந்நூலுக்கு அருளி யுள்ள ஸ்ரீமுகத்தால் நன்கறியலாம். இதற்கு முன்னுரை எழுதிய Dr. V. ராகவன் M.A., Ph. D. அவர்களுக்கும், அனுவாதத்தையும் குறிப்புகளையும் எழுதி யச்சிடுவதற்கு உதவிய நண்பர்களுக்கும், என் நன்றி உரியதாகும்

13-6-1943] **ஏ.எஸ்.நடராஜ அய்யர்.**

ॐ

ஶ்ரீ லோஷ்டதேவர் எழுதிய

**ஶ்ரீ தீனாக்ரந்தனம்**

என்னும்

# ஶ்ரீ காஶீ விஶ்வேஶ்வர ஸ்தோத்ரம்

**चुण्ठीजलैरिव सुखैः परिणामदुःखैः**
**आस्वादितैरपि मनागविलुप्ततृष्णः ।**
**श्रान्तोऽस्मि हा भवमरौ सुचिरं चरित्वा**
**तच्छायया चरणयोः शिव मां भजेथाः ॥ १ ॥**

**சுண்டீ2ஜலைரிவ ஸுகை2: பரிணாமது3:கை2:**
**ஆஸ்வாதி3தைரபி மநாக3விலுப்தத்ருஷ்ண: ।**
**ஶ்ராந்தோ(அ)ஸ்மி ஹா ப4வமரௌ ஸுசிரம் சரித்வா**
**தச்சா2யயா சரணயோ: ஶிவ மாம் ப4ஜேதா2: ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **हे शिव**<br>**ஹே ஶிவ** | = | ஏ பரமசிவ! |
| **आस्वादितैः अपि**<br>**ஆஸ்வாதி3தை: அபி** | = | அனுபவிக்கப் பட்டபோதிலும், |
| **चुण्ठीजलै इव**<br>**சுண்டீ2ஜலை இவ** | = | பாலை வனத்தின் மத்தியில் இருக்கும் ஜலத்தைப் போன்றதும், |
| **परिणाम-दुःखैः**<br>**பரிணாம-து3:கை2:** | = | முடிவில் துக்கத்தைக் கொடுப்பது மான |
| **सुखैः**<br>**ஸுகை2:** | = | ஸுகங்களினால் |
| **मनाक्**<br>**மனாக்** | = | கொஞ்சமும், |
| **अविलुप्त-तृष्णः**<br>**அவிலுப்த-த்ருஷ்ண:** | = | தாகம் (ஆசை) அடங்காதவனாய், |
| **भव-मरौ**<br>**ப4வ-மரௌ** | = | ஸம்ஸாரம் என்கிற பாலைவனத்தில், |
| **सुचिरं**<br>**ஸுசிரம்** | = | மிகவும் நீண்ட காலம், |

| | | |
|---|---|---|
| **चरित्वा**<br>**சரித்வா** | = | அலைந்து, |
| **श्रान्तः-अस्मि**<br>**ஶ்ராந்த꞉-அஸ்மி** | = | களைத்து இருக்கிறேன், |
| **हा**<br>**ஹா** | = | அந்தோ! |
| **तत्**<br>**தத்** | = | ஆகையால், |
| **चरणयोः**<br>**சரணயோ꞉** | = | (உமது) இரண்டு பாதங்களினுடைய, |
| **छायया**<br>**சா²யயா** | = | நிழலினுல், |
| **मां**<br>**மாம்** | = | என்னை, |
| **भजेथाः**<br>**ப⁴ஜேதா²꞉** | = | அனுக்ரஹம் செய்யுங்கள். |

ஏ! பரமசிவ! சுகமானது அனுபவிக்க அனுபவிக்க ஆசையை விருத்தி செய்கிறது. பாலைவனத்தில் கிடைக்கும் ஜலம் அல்பம்; அதைக் குடிக்கக் குடிக்கத் தாகமும் அதிகமாகின்றது. இம்மாதிரி கொஞ்சமும் ஆசை அடங்காமல் ஸம்ஸாரம் என்னும் பாலைவனத்தில் அலைந்து திரிந்து களைத்து இருக்கிறேன். களைப்படைந்தவன் வேண்டுவது சுகம் அல்லவா? அம்மாதிரி ஸம்ஸார தாபத்தினுல் களைத்த எனக்கு உமது இரு பாதங்களின் நிழலைத் தந்து அனுக்ரஹம் செய்யுங்கள்.

மலைச்சாரல்களில் மலையாறுகளின் தண்ணீர் தேங்கியுள்ள இடங்களில் இலைகள் உதிர்ந்து தண்ணீர் கெட்டதாகி இருக்கும். அந்த நீரைப் பருகினுல் நோய்கள் உண்டாகும்; வேட்கையுடன் கூடிய சுரம் தோன்றும். அதுபோலவே விஷய சுகங்களை அனுபவிப்பதனுல் அதிகத் தீமையை அளிப்பதுடன், போதும் என்கிற எண்ணத்தையும் தருவதில்லை.

**குறிப்பு** - **சிவ நாமாவின் பெருமை**. "சிவ" என்பதற்குப் பரமமங்களம் என்பது அர்த்தம்.

**'श्वःश्रेयस शिवं भद्रं कल्याणं मङ्गलम् शुभम्'**

**'ஶ்வ꞉ஶ்ரேயஸ ஶிவம் ப⁴த்³ரம் கல்யாணம் மங்க³லம் ஶுப⁴ம்'**

என்பது அமரகோசம். பாபத்தை ஒரே க்ஷணத்தில் த்வம்ஸம் பண்ணும் ஒரு வஸ்து உண்டு. அந்த வஸ்துவைப் பல இடங்களிலும் போய்த் தேடவேண்டாம். இரண்டு எழுத்துக்களாலான பெயர் அது. ஸகல வேதங்களுக்கும் மத்தியில் இருப்பது அது.

அதுவே வேதங்களின் ஜீவரத்னம். கோயிலில் மஹாலிங்கம் போலவும் அது வேதங்களின் மத்தியில் இருக்கிறது. அதை என்ன பண்ணவேண்டும்? வாக்கினுற் சொல்லவேண்டும். யார் சொல்ல வேண்டும்? மனிதனுகப் பிறந்தவன் சொல்ல வேண்டும். ஊமையாக இல்லாதவன் எவனும் சொல்லலாம். அதைச் சொல்லுவத ற்காகத் தான் நாக்கு இருக்கிறது. மனிதன் அதைச் சொல்லாவிட்டால் நாக்கினுல் செய்யக் கூடியதை இவன் செய்யவில்லை. இவனுக்கு நாக்குக் கொடுத்துப் பிரயோஜனம் இல்லை என்று பரமேச்வரர் திரும்பி வாங்கிவிடுவார். ஆகையால் எல்லோரும் அதைச் சொல்லியாக வேண்டும்."

- ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளரு ளிய நன்மொழிகள், பாகம் I, பக்கம் 309-311.

"வேதங்களுள் யஜுர் வேதம் முக்யமானது. அதற்குள் அதன் மத்திய பாகமா கிற நாலாவது காண்டம் முக்யமானது. அதற்குள்ளும் மத்திய பாகமான ஐந்தாவது பிரச்னம் முக்யமானது. அதற்குள் ஸ்ரீருத்ரம். அதற்குள்ளும் ‘நம:சிவாய’ என்ற பஞ்சாக்ஷர வாக்கியம் மத்தியில் இருக்கின்றது. அதன் மத்தியில் ‘சிவ’ என்று இரண்டு அக்ஷரம் அடங்கியிருக்கிறது. இதை ஜீவரத்னம் என்று சொல்லுவார்கள்.”

- ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I, பக்கம் 58, 59.

“நித்தியமும் ஸாயங்காலத்தில் ஐந்து நிமிஷமாவது சிவஸ்மரணை பண்ணிக் கொண்டுவர எல்லோரும் ஸங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். ஆயுள் பரியந்தம் பண்ணுவதாக ஸங்கல்பம் செய்து கொண்டு மனத்தால் ஸ்மரணம் பண்ணிக் கொண்டு வாக்கினுல் சிவ நாமாவைச் சொல்லவேண்டும்.”

- ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I, பக்கம் 511.

**दुर्वारसंसृतिरुजा भृशकांदिशीकः**
**त्वामोषधीपतिभृतं सुकृतैरवाप्य ।**
**आवेदयामि यदहं तव तन्निदानम्**
**तत्रावधेहि मृड मा कुरु मय्यवज्ञाम् ॥ २ ॥**

**து³ர்வாரஸம்ஸ்ருதிருஜா ப்⁴ருஶகாந்தி³ஶீக:**
**த்வாமோஷதீ⁴பதிப்⁴ருதம் ஸுக்ருதைரவாப்ய ।**
**ஆவேத³யாமி யத³ஹம் தவ தந்நிதா³னம்**
**தத்ராவதே⁴ஹி ம்ருட³ மா குரு மய்யவஜ்ஞாம் ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **हे मृड**<br>**ஹே ம்ருட³** | = | ஏ பரமசிவ! |
| **दुर्वार-संसृति-रुजा**<br>**து³ர்வார-ஸம்ஸ்ருதி-ருஜா** | = | தடுக்க முடியாத ஸம்ஸாரமாகிய ரோகத்தால், |

| | | |
|---|---|---|
| **भृश-कांदिशीकः (सन्)**<br>**ப்⁴ருஶ-காந்தி³ஶீக: (ஸன்)** | = | மிகவும் திக்ப்ரமை பிடித்தவனாய்<br>(பயந்தவனாய்), |
| **सुकृतैः**<br>**ஸுக்ருதை:** | = | (ஏதோ பூர்வ ஜன்மங்களில் செய்த)<br>புண்ணியங்களால், |
| **ओषधीपति-भृतं**<br>**ஓஷதீ⁴பதி-ப்⁴ருதம்** | = | ஓஷதிகளுக்கு ராஜாவான<br>சந்திரனை (தலையில்) தரிக்கும், |
| **त्वां**<br>**த்வாம்** | = | உம்மை, |
| **अवाप्य**<br>**அவாப்ய** | = | அடைந்து, |
| **यत्**<br>**யத்** | = | எந்த, |
| **तन्निदानम्**<br>**தந்நிதா³னம்** | = | அந்த (என்) வியாதியின்<br>காரணத்தை, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **तव**<br>**தவ** | = | உமக்கு, |
| **आवेदयामि**<br>**ஆவேத³யாமி** | = | தெரிவிக்கிறேனே, |
| **तत्र**<br>**தத்ர** | = | அதை, |
| **अवधेहि**<br>**அவதே⁴ஹி** | = | கவனிக்க வேண்டும், |
| **मयि**<br>**மயி** | = | என்னிடத்தில், |
| **अवज्ञाम्**<br>**அவஜ்ஞாம்** | = | அலக்ஷ்யத்தை, |
| **मा कुरु**<br>**மா குரு** | = | செய்யாதேயுங்கள். |

ஏ! ம்ருட! நான் ஸம்ஸாரம் என்கிற ரோகத்தினால் பீடிக்கப்பட்டு இருக்கிறேன். இது தீராத நோயாய் இருக்கிறது. இதனால் திகைத்து நிற்கிறேன். பூர்வ ஜன்ம புண்ணியத்தால் தங்களை வைத்தியனாக அடைந்தேன். என்னுடைய வியாதியின் தன்மையைச் சொல்லுகிறேன். தாங்கள் என்மேல் அலக்ஷியம் செய்யாமல் காது கொடுத்துக் கேட்க வேண்டும்.

**குறிப்பு** - ஓஷதிகளுக்கு ராஜாவான சந்திரனை தரிப்பவர் என்றும், ம்ருடர் என்றும் இங்கு கவி சிவனைச் சொன்னதின் பொருத்தம் குறிக்கத் தக்கது. **मृड:** 'ம்ருட' என்னும் சொல் வேதத்தில் சிவனுக்கு மிகவும் முக்யமான சொல்லாய் உபயோகிக் கப்பட்டிருக்கிறது.

**'या ते रुद्र शिवा तनूः शिवा विश्वाहभेषजी ।**
**शिवा रुद्रस्य भेषजी तया नो मृड जीवसे ॥'**

**'யா தே ருத்³ர ஶிவா தனூː ஶிவா விஶ்வாஹபே⁴ஷஜீ ।**
**ஶிவா ருத்³ரஸ்ய பே⁴ஷஜீ தயா நோ ம்ருட³ ஜீவஸே ॥'**

என்பது ஸ்ரீருத்ரம். 'ம்ருட' என்னும் சொல்லுக்கு ஸுகம் செய்பவன் என்று பொருள்.

**मृड सुरवने ம்ருட³ ஸுரவனே** என்பது தாது பாடம். நோய் உண்டானவன் சுகம் செய்பவனை யல்லவோ தேடி நோயைத் தீர்த்துக் கொள்ளவேண்டும். அப்படியே ஸம்ஸாரமாகிய நோயால் வருந்துகின்ற கவி ம்ருடனுகிய சிவனைத் தேடிச் செல்லுகிறது உசிதமே. அவர் உருவமே உலகுக்கோர் மருந்து என்றல்லவோ மேற் சொன்ன மந்திரம் சொல்லுகிறது.

'ம்ருட' முதலிய பதங்களின் பொருள்களை **ஸ்ரீ ருத்ர** பாஷ்யத்திலும் நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய 'சிவ தத்வ ரகஸ்யம்' என்ற சிவ-அஷ்டோத்தர வியாக்கியானத் திலும் காண்க. இந்நூலில் வரும் **சிவ நாமங்கள்** எல்லாம் சிவ அஷ்டோத்தரத்தில் வந்திருக்கின்றன.

**दुर्वासनाशतवशादशुचित्वमीक्ष्य**
**या मे हठात्कृतवती मनसि प्रवेशम् ।**
**सा ऽनेकजन्ममरणावटपातनेन**
**मां राक्षसीव बहु नाथ तुदत्यविद्या ॥ ३ ॥**

**து³ர்வாஸநாஶதவஶாத³ஶுசித்வமீக்ஷ்ய**
**யா மே ஹடா²த்க்ருதவதீ மனஸி ப்ரவேஶம் ।**
**ஸா (அ)னேகஜன்மமரணாவடபாதனேன**
**மாம் ராக்ஷஸீவ ப³ஹு நாத² துத³த்யவித்³யா ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **हे नाथ** ஹே நாத² | = | ஏ ஸ்வாமிந்! |
| **दुर्वासना-शत-वशात्** து³ர்வாஸனு-ஶத-வஶாத் | = | நூற்றுக் கணக்கான கெட்ட வாஸனைகளினுல் ஏற்பட்ட, |
| **अशुचित्वम्** அஶுசித்வம் | = | அநாசாரத்தை, |

| | | |
|---|---|---|
| **ईक्ष्य**<br>**ஈக்ஷ்ய** | = | பார்த்து, |
| **या**<br>**யா** | = | எந்த, |
| **अविद्या**<br>**அவித்³யா** | = | அவித்யை, |
| **राक्षसी इव**<br>**ராக்ஷஸீ இவ** | = | ராக்ஷஸியைப்போல், |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **मनसि**<br>**மனஸி** | = | மனத்தில், |
| **हठात्**<br>**ஹடா²த்** | = | பலாத்காரமாக, |
| **प्रवेशम् कृतवती**<br>**ப்ரவேஶம் க்ருதவதீ** | = | நுழைந்து இருக்கிறளோ, |
| **सा**<br>**ஸா** | = | அந்த அவித்யை, |
| **मां**<br>**மாம்** | = | என்னை, |
| **अनेक-जन्म-मरण-अवट-पातनेन**<br>**அனேக-ஜன்ம-மரண-அவட-பாதனேன** | = | பல பிறப்பு இறப்பு என்கிற குழிகளில் தள்ளுவதால், |
| **बहु**<br>**ப³ஹு** | = | மிகவும், |
| **तुदति**<br>**துத³தி** | = | துன்பப்படுத்துகிறாள். |

ராக்ஷஸி ஒருவனைப் பிடிப்பதுபோல், என்னை அவித்யை என்பது பிடித்துத் துன்பப்படுத்துகிறது. ராக்ஷஸி பிசாசம் பூதம் முதலியன ஒருவனுடைய அநாசாரத்தைக் கண்டல்லவோ அவனைப் பிடிக்கும். என்னிடம் எண்ணிக்கையில்லாத துர்வாஸனைகள் குடி கொண்டு இருக்கின்றன. அந்த அநாசாரத்தைக் கண்டு அவித்யை என் மனத்தில் பிரவேசிக்கிறது. ராக்ஷஸி தான் பிடித்தவர்களைக் குழியில் தள்ளுவது முதலிய சேஷ்டைகளால் துன்பப்படுத்துமல்லவா? அம்மாதிரி இந்த அவித்யை என்னை பிறப்பு இறப்பு என்கிற குழியில் தள்ளுகிறது. அநேக ஜன்மங்களை எடுக்கும்படி செய்து துன்பப்படுத்துகிறது.

**'नाथ'** 'நாத' என்று சிவனைக் கவி அழைப்பது மிகவும் பொருத்தமானதே. சிவன் ராக்ஷஸ பிசாச கணங்களுக்கெல்லாம் அதிபதியன்றோ. அவர் சொன்னபடி அந்த கணங்கள் கேட்கவேண்டும். ஆகையால் அவித்யையைப் போக்க அதனுடைய நாதனை சிவனையே சரணம் அடைகிறார் கவி.

**घोरे क्षणं विनिपतन्नरके क्षणं च**
**पुण्यं पदं दिविषदां सहसाऽधिरोहन् ।**
**मोहेन कन्दुकदशामिव नीयमानः**
**स्वामिन् सहे किमवधीनि गतागतानि ॥ ४ ॥**

**கோ⁴ரே க்ஷணம் வினிபதந்நரகே க்ஷணம் ச**
**புண்யம் பத³ம் தி³விஷதா³ம் ஸஹஸா(அ)தி⁴ரோஹன் ।**
**மோஹேன கந்து³கத³ஶாமிவ நீயமானः**
**ஸ்வாமின் ஸஹே கிமவதீ⁴னி க³தாக³தானி ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **हे स्वामिन्**<br>**ஹே ஸ்வாமின்** | = | ஏ நாத! |
| **क्षणं**<br>**க்ஷணம்** | = | ஒரு க்ஷண காலம், |
| **घोरे नरके**<br>**கோ⁴ரே நரகே** | = | கோரமான நரகத்தில், |
| **विनिपतन्**<br>**வினிபதன்** | = | விழுந்து கொண்டும், |
| **क्षणं च**<br>**க்ஷணம் ச** | = | மற்றொரு க்ஷணகாலம், |
| **दिविषदां**<br>**தி³விஷதா³ம்** | = | தேவர்களுடைய, |
| **पुण्यं पदं**<br>**புண்யம் பத³ம்** | = | புண்ய ஸ்தானத்தை அதாவது ஸ்வர்க்கத்தை, |
| **सहसा**<br>**ஸஹஸா** | = | திடீரென, |
| **अधिरोहन्**<br>**அதி⁴ரோஹன்** | = | ஏறிக்கொண்டும், |
| **मोहेन**<br>**மோஹேன** | = | (என்னுடைய) அஜ்ஞானத்தினால், |
| **कन्दुक-दशाम्-नीयमानः इव**<br>**கந்து³க-த³ஶாம்-நீயமானः இவ** | = | மேலும் கீழும் மாறி மாறிப் போய்க் கொண்டு இருக்கும் பந்தின் தசையை அடைவிக்கப்பட்டவன் போல், |

| | | |
|---|---|---|
| **गतागतानि**<br>**க³தாக³தானி** | = | இந்த போக்கு வரவுகளை, |
| **किमवधीनि**<br>**கிமவதீ⁴னி** | = | எது வரைக்கும் என்று, |
| **सहे**<br>**ஸஹே** | = | ஸஹிப்பேன்? |

ஏ ஸ்வாமிந்! சிறிது காலம் நரகத்தில் துக்கங்களை அனுபவிக்கின்றேன். சிறிது காலம் ஸ்வர்க்கத்தில் ஸுகங்களை அனுபவிக்கிறேன். இப்படியே ஜனனமரணங்களின் சுக துக்கங்களை அனுபவித்துக் கொண்டு, மேலும் கீழும் அடிக்கப்படும் பந்தைப் போல் கஷ்டப்படுகிறேன். இதை நான் எப்படிப் பொறுப்பேன்? இதற்கு ஏதாவது எல்லை உண்டா?

**குறிப்பு - स्वामिन्** - ஸ்வாமிந். "ஸ்வாமி என்ற வார்த்தையில் ஸ்வம் என்பதற்கு ஸொத்து என்பது அர்த்தம். உடைமை என்று இலக்கணமாகச் சொல்லலாம். ஸ்வம் உடையவர் ஸ்வாமி. அதாவது ஸொத்தை உடையவர். ஸொத்து எது? நாம் தான். என் ஸ்வாமி என்றால் என்னை ஸொத்தாக உடையவர் என்று அர்த்தம்."

- ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் III, பக்கம் 47.

"நமக்கு ஒரு எல்லை உண்டு. அவர் எல்லை யற்றவர். ஆகையால் அவர் ஞான ஸமுத்ரம், தயா ஸமுத்ரம், சக்தி ஸமுத்ரம், ஸர்வஜ்ஞன். நாம் அவருடைய சொத்து. அவர் ஸ்வாமி, நம்மை உடையவர்."

- ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் III, பக்கம் 52.

**का मे गतिविंशति नैव मनो विवेक:**
**स्वप्नेऽपि पक्कणमिव प्रवरो द्विजानाम् ।**
**रुद्धेऽपि तत्र न स रोढुमलं मुहूर्तम्**
**विश्वेश मौक्तिकमिवोपरि दर्पणस्य ॥ ५ ॥**

**கா மே க³திவிம்ஶதி நைவ மனோ விவேக:**
**ஸ்வப்னே(அ)பி பக்கணமிவ ப்ரவரோ த்³விஜானாம் ।**
**ருத்³தே⁴(அ)பி தத்ர ந ஸ ரோடு⁴மலம் முஹூர்தம்**
**விஶ்வேஶ மௌக்திகமிவோபரி த³ர்பணஸ்ய ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **हे विश्वेश**<br>**ஹே விஶ்வேஶ** | = | ஜகத்துக்கெல்லாம் ஈச்வரனே! |
| **का मे गति:** | = | எனக்கு என்ன கதி? |

கா மே க³தி:

| | | |
|---|---|---|
| द्विजानाम् प्रवरः<br>த்³விஜாநாம் ப்ரவர: | = | பிராமண சிரேஷ்டன், |
| स्वप्नेऽपि<br>ஸ்வப்னே(அ)பி | = | ஸ்வப்னத்திலும், |
| पक्कणं<br>பக்கணம் | = | பறைச்சேரியை, |
| न एव विशति इव<br>ந ஏவ விஶதி இவ | = | எப்படிப் பிரவேசிக்கவே<br>மாட்டானோ (அப்படி) |
| विवेकः<br>விவேக: | = | விவேகமானது, |
| मे मनः<br>மே மன: | = | என்னுடைய மனத்தை, |
| न एव विशति<br>ந ஏவ விஶதி | = | பிரவேசிக்கிறதேயில்லை, |
| रुद्धेऽपि<br>ருத்³தே⁴(அ)பி | = | சிரமப்பட்டு அவ்விவேகத்தைப்பிடித்து<br>நிறுத்தினாலும், |
| सः<br>ஸ: | = | அது, |
| दर्पणस्य उपरि<br>த³ர்பணஸ்ய உபரி | = | கண்ணாடியின் மேல் (வைக்கப்பட்ட), |
| मौक्तिक इव<br>மௌக்திக இவ | = | முத்துபோல், |
| मुहूर्तम्<br>முஹூர்தம் | = | ஒரு முஹூர்த்தம் கூட, |
| तत्र रोढुं न अलम्<br>தத்ர ரோடு⁴ம் ந அலம் | = | என் மனதில் (நிலைத்து) நிற்பதற்குச்<br>சக்தியில்லாமல் இருக்கிறது.<br>(கண்ணாடியின் மேல் வைக்கப்பட்ட<br>முத்தானது ஓரிடத்திலும் நிலைத்து<br>நில்லாமல் உருண்டுவிடுகிறது என்று<br>கவியின் பாவம் போலும்.) |

பறைச்சேரிபோல் மிகவும் அசுத்தமானது என் மனம்; பிராமண சிரேஷ்டன் போல் மிகவும் தூய்மையும் மஹிமையும் வாய்ந்தது அறிவு; ஸ்வப்னத்திலும் கூட என் மனத்தில் அது எப்படிப் ப்ரவேசிக்கும்? ஒரு ஸமயம் கஷ்டப்பட்டு அந்த அறிவைப்பிடித்து மனத்தில் நிறுத்தலாம் என்றாலோ, அது ஒரு சிறிதும் நிற்காமல் கண்ணாடியின்மேல் வைக்கப்பட்ட முத்தைப்போல் தத்தளிக்கின்றது; நிலையாய்

நிற்பதில்லை. அந்த அறிவு (விவேகம்) என் மனத்தில் எப்படி வேர் ஊன்றித் தழைக்கும்?

இனி வைராக்யம் த்ருடப்படுவதற்காக ஜீவன் ஜன்மம் எடுத்த ப்ரகாரத்தை ஜுகுப்ஸை ஏற்படும்படி, கர்போபநிஷத்தில் சொல்லிய ப்ரகாரம், கவி விவரிக்கிறார்.

**पित्रोर्जघन्यरसबिन्दुयुगं गृहीत्वा**
**हन्तासकृत्पतितवानधिगर्भवासम् ।**
**तद्दुःखमन्वभवमीश गभीरकुम्भी-**
**पाको वराक इति यस्य पुरो गृणन्ति ॥ ६ ॥**

**பித்ரோர்ஜக⁴ன்யரஸபி³ந்து³யுக³ம் க்³ருஹீத்வா**
**ஹந்தாஸக்ருத்பதிதவானதி⁴க³ர்ப⁴வாஸம் ।**
**தஹு:க²மன்வப⁴வமீஶ க³பீ⁴ரகும்பீ⁴-**
**பாகோ வராக இதி யஸ்ய புரோ க்³ருணந்தி ॥ 6 ॥**

**हे ईश** = ஏ பரமசிவ!
**ஹே ஈஶ**
**पित्रोः** = மாதாபிதாக்களுடைய,
**பித்ரோ:**
**जघन्य-रस-बिन्दु-युगं** = ஜகனத்தில் (இழிவான இடத்தில்)
**ஜக⁴ன்ய-ரஸ-பி³ந்து³-யுக³ம்** உண்டான சுக்ல சோணிதம் என்ற இரண்டு பிந்துக்களை,
**गृहीत्वा** = பற்றிக்கொண்டு,
**க்³ருஹீத்வா**
**हन्त** = அந்தோ!
**ஹந்த**
**असकृत्** = அடிக்கடி,
**அஸக்ருத்**
**अधिगर्भवासम्** = கர்ப்பவாஸத்தில்,
**அதி⁴க³ர்ப⁴வாஸம்**
**पतितवान्** = விழுந்தவனாக (அடிக்கடி கர்ப்பவாஸம்
**பதிதவான்** செய்து),
**यस्य पुरः** = எந்த (கர்ப்பவாஸத் துன்பத்திற்கு) முன்
**யஸ்ய புர:**
**गभीरकुम्भीपाकः** = மிகப்பெரிதான கும்பீபாகம் என்ற நரக(த்
**க³பீ⁴ரகும்பீ⁴பாக:** துன்ப)மானது,
**वराक इति** = அல்பமானது என்று,

வராக இதி
गृणन्ति = (பெரியோர்கள்) சொல்லுகிறுர்களோ,

க்³ருணந்தி
तद्दुःखं = அந்த(க் கர்ப்பவாஸ) துக்கத்தை,

தஹுூ:க²ம்
अन्वभवम् = அனுபவித்தேன்.

அன்வப⁴வம்

மாதா பிதாக்களின் இழிவான இடத்தில் உண்டான பிந்துக்களின் மூலம் பிறப்படைந்து அடிக்கடி கர்ப்ப வாஸம் செய்தேன். கர்ப்பத்தில் ஜீவனுய் நான் அனுபவித்த துக்கத்தை வாயால் சொல்ல முடியாது. கும்பீபாக நரகவேதஊகள் எல்லாம் நான் அனுபவித்த கர்ப்பவாஸத்திற்கு முன்பு அல்பம் என்றே தோன்றும்.

**குறிப்பு** - தன் பிறப்பிற்குக் காரணமான மாதா பிதாக்களின் சுக்ல சோணிதங் கஊச் சொன்னது பிறப்பின் இழிவு தீவனிப்பதற்காக. நரகங்களுள் கும்பீபாகத்தைக் கர்ப்பவாஸத்திற்கு உபமானமாக எடுத்ததின் பொருத்தமும் இங்குக் குறிக்கத்தக்கது.

இதே அர்த்தம் ஸூதஸம்ஹிதையிலும் சொல்லப்படுகிறது.

इत्थं परिणतो गर्भः पूर्वकर्मवशान्सुने ।
महद्दुःखमवाप्नोति रौरवे नरके यथा ॥

இத்த²ம் பரிணதோ க³ர்ப⁴: பூர்வகர்மவஶான்ஸுனே ।
மஹத்³து³:க²மவாப்னேதி ரௌரவே நரகே யதா² ॥

- ஸூதஸம்ஹிதை II. 10. 21-22.

तत्र स्थितस्तदनु तत्तदनेकपूर्व
जन्मान्तरस्मरण विस्मयदुःखितात्मा ।
अस्मान्निसृत्य पुनरुद्भवभङ्गहेतोः
चेतो विधास्य इति चाकरवं प्रतिज्ञाम् ॥ ७ ॥

தத்ர ஸ்தி²தஸ்தத³னு தத்தத³னேகபூர்வ
ஜன்மாந்தரஸ்மரண விஸ்மயது³:கி²தாத்மா ।
அஸ்மாந்நிஸ்ருத்ய புனருத்³ப⁴வப⁴ங்க³ஹேதோ:
சேதோ விதா⁴ஸ்ய இதி சாகரவம் ப்ரதிஜ்ஞாம் ॥ 7 ॥

तदनु = அதற்குப் பிறகு,

தத³னு
तत्र स्थितः (सनु) = அந்த கர்ப்பத்தில் இருந்து கொண்டு,

தத்ர ஸ்தி²த: (ஸனு)

| | | |
|---|---|---|
| **ततू-तदू-अनेकपूव- जन्मान्तरस्मरण- विस्मय-दु:खितात्मा** | = | அந்த அந்த பல பூர்வ ஜன்மங்களின் ஞாபகத்தால் ஆச்சர்யமும் துக்கமும் அடைந்த மனதுடையவனாய், |
| **ததூ-ததூ$^3$-அனேகபூவ- ஜன்மாந்தரஸ்மரண- விஸ்மய-து$^3$:கி$^2$தாத்மா** | | |
| **अस्मात्** | = | இந்த கர்ப்பக் குழியில் இருந்து, |
| **அஸ்மாத்** | | |
| **निसृत्य** | = | வெளிவந்து, |
| **நிஸ்ருத்ய** | | |
| **पुन: उरुद्भव-भङ्गहेतो:** | = | மறுபடியும் ஜன்மம் எடுத்தலை ஒழிப்பதின் உபாயத்திற்காக, |
| **புன: உருத்$^3$ப$^4$வ-ப$^4$ங்க$^3$ஹேதோ:** | | |
| **चेत:** | = | மனத்தை, |
| **சேத:** | | |
| **विधास्ये** | = | செலுத்துவேன் (அதாவது வழிதேடுவேன்), |
| **விதா$^4$ஸ்யே** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **प्रतिज्ञाम् च** | = | ப்ரதிஜ்ஞையையும், |
| **ப்ரதிஜ்ஞாம் ச** | | |
| **अकरवं** | = | செய்தேன். |
| **அகரவம்** | | |

அப்படிக் கர்ப்பவாஸம் செய்யும் காலத்தில் நான் முன்பு எடுத்திருந்த அநேக ஜன்மங்கள் ஞாபகத்திற்கு வந்தன. அந்த ஜன்மங்களை நினைத்து ஆச்சர்யத்தையும் வருத்தத்தையும் அடைந்தேன். அப்பொழுது "இனி இந்தக் கர்ப்பவாஸத்திலிருந்து வெளிவந்ததும் மறுபடியும் கர்ப்பவாஸ துக்கம் இல்லாமல் இருக்கும் மார்க்கத்தைத் தேடுவேன். அதற்குத் தங்கள் சரணாரவிந்தங்களிலேயே என் மனத்தைச் செலுத்து வேன்" என்று பிரதிஜ்ஞையும் செய்தேன்.

**குறிப்பு** - இதே விஷயம் கர்போபநிஷத்திலும், ஸூதஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**तां पीडां च विजानाति तदा जातिस्तरो भवेत् ।**
**नानायोनिसहस्राणि पुरा प्राप्तानि वै मया ॥**
**अहो दु:खोदधौ मग्नो न पश्यामि प्रतिक्रियाम् ।**
**यदि योन्या: प्रमुञ्चामि तं प्रपद्ये महेश्वरम् ॥**
**संसारसागरं घोरं लङ्घयाम्यह मात्मन: ।**
**इत्थं गर्भगत: स्मृत्वा योनियन्त्रप्रपीडनात् ॥**

**தாம் பீடா³ம் ச விஜானதி ததா³ ஜாதிஸ்தரோ ப⁴வேத் ।**
**நானயோநிஸஹஸ்த்ராணி புரா ப்ராப்தானி வை மயா ॥**
**அஹோ து³:கோ²த³தௌ⁴ மக்³னோ ந பஶ்யாமி ப்ரதிக்ரியாம் ।**
**யதி³ யோன்யா: ப்ரமுஞ்சாமி தம் ப்ரபத்³யே மஹேஶ்வரம் ॥**
**ஸம்ஸாரஸாக³ரம் கோ⁴ரம் லங்க⁴யாம்யஹ மாத்மன: ।**
**இத்த²ம் க³ர்ப⁴க³த: ஸ்ம்ருத்வா யோநியந்த்ரப்ரபீட³னத் ॥**

- ஸூதஸம்ஹிதை III. 10. (22.23.24.30)

**तेनाध्वनाथ निसृतोऽस्मि ततः स्मृतेऽपि**
**यस्मिन्निकाममभिमानधनास्त्रपन्ते ।**
**संस्पर्शतस्तु शतशः शितिकर्मवायोः**
**प्रायो निगूढदृढमूढदशामवापम् ॥ ८ ॥**

**தேனத்⁴வநாத² நிஸ்ருதோ(அ)ஸ்மி தத: ஸ்ம்ருதே(அ)பி**
**யஸ்மிந்நிகாமமபி⁴மானத⁴னாஸ்த்ரபந்தே ।**
**ஸம்ஸ்பர்ஶதஸ்து ஶதஶ: ஶிதிகர்மவாயோ:**
**ப்ராயோ நிகூ³ட⁴த்³ருட⁴மூட⁴த³ஶாமவாபம் ॥ 8 ॥**

**अथ** = பிறகு,
**அத²**

**यस्मिन्** = எந்த வழியானது,
**யஸ்மின்**

**स्मृते अपि** = நினைக்கப்பட்டாலும்,
**ஸ்ம்ருதே அபி**

**अभिमानधनाः** = மானிகள்,
**அபி⁴மானத⁴னா:**

**निकामम्** = மிகவும்,
**நிகாமம்**

**त्रपन्ते** = (அதிலிருந்து) வெட்கப்படுகிறார்களோ,
**த்ரபந்தே**

**तेन** = அந்த,
**தேன**

**अध्वना** = வழியாய்,
**அத்⁴வனா**

**ततः** = அந்த கர்பவாஸத்திலிருந்து,
**தத:**

**निसृतः अस्मि** = வெளி வந்தேன்,
**நிஸ்ருத: அஸ்மி**

| | | |
|---|---|---|
| **शतशः शितिकर्मवायोः** ஶதஶ: ஶிதிகர்மவாயோ: | = | கணக்கில்லாத பாபகர்மங்களின் மூலம் (வைஷ்ணவ) வாயுவினுடைய, |
| **संस्पर्शतः** ஸம்ஸ்பர்ஶத: | = | ஸ்பர்சத்தால், |
| **प्रायः** ப்ராய: | = | பெரும்பாலும், |
| **निगूढ-दृढ-मूढ-दशाम्** நிகூ³ட⁴-த்³ருட⁴-மூட⁴-த³ஶாம் | = | மிகவும் திருடமான அவிவேக தசையை, |
| **अवापम्** அவாபம் | = | அடைந்தேன். |

பிறகு அந்தக் கர்ப்ப வாஸஸ்தானத்திலிருந்து நான் வெளிவந்தேன். நான் வெளிவந்த வழியை நினைத்தாலும் மானிகள் வெட்கப்படுவார்கள். (வைஷ்ணவ) வாயுவின் ஸ்பர்சத்தால் பூர்வ ஜன்ம நினைவுபோய், நான் மறுபிறப்பில்லாததற்கு முயல்வேன் என்ற ஸங்கல்பமும் மறந்து போய், த்ருடமான அவிவேக தசையை அடைந்தேன்.

**குறிப்பு** - இதே விஷயம் ஸூதஸம்ஹிதையிலும் கர்போபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**जायते वायुना याति विस्मृतिं वैष्णवेन च ।**
**अज्ञाने सति रागाद्याः धर्माधर्मौ च तद्वशात् ॥**

**ஜாயதே வாயுனா யாதி விஸ்ம்ருதிம் வைஷ்ணவேன ச ।**
**அஜ்ஞானே ஸதி ராகா³த்³யா: த⁴ர்மாத⁴ர்மௌ ச தத்³வஶாத் ॥**

- ஸூதஸம்ஹிதை II. 10. 31

**जातमात्रस्तु वैष्णवेन वायुना संस्पृश्यते तदा न स्मरति ।**

**ஜாதமாத்ரஸ்து வைஷ்ணவேன வாயுனா ஸம்ஸ்ப்ருஶ்யதே ததா³ ந ஸ்மரதி ।**

- கர்போபநிஷத்.

**तिर्यग्दशामिव शनैरविवेकसेकात्**
**वर्षाण्यवाप्य परमेश्वर पञ्चषाणि ।**
**तत्तत्कृतं पतदपि स्मृतिसीम्नि यद्यत्**
**सध्यो ह्रियं जडधियोऽपि हृदि प्रसूते ॥ ९ ॥**

**திர்யக்³த³ஶாமிவ ஶனைரவிவேகஸேகாத்**
**வர்ஷாண்யவாப்ய பரமேஶ்வர பஞ்சஷாணி ।**
**தத்தத்க்ருதம் பதத³பி ஸ்ம்ருதிஸீம்னி யத்³யத்**
**ஸத்⁴யோ ஹ்ரியம் ஜட³தி⁴யோ(அ)பி ஹ்ருதி³ ப்ரஸூதே ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **हे परमेश्वर**<br>**ஹே பரமேஶ்வர** | = | ஹே பரமேச்வர! |
| **शनैः**<br>**ஶநை:** | = | மெள்ள மெள்ள, |
| **अविवेक-सेकात्**<br>**அவிவேக-ஸேகாத்** | = | பகுத்தறிவின்மையில் தோய்ந்து, |
| **पञ्चषाणि**<br>**பஞ்சஷாணி** | = | ஐந்து ஆறு, |
| **वषाणि**<br>**வஷாணி** | = | (வர்ஷங்களை) வயதை, |
| **तिर्यग्दशाम् इव**<br>**திர்யக்³த³ஶாம் இவ** | = | மிருகத்தன்மையைப் போல, |
| **अवाप्य**<br>**அவாப்ய** | = | அடைந்து, |
| **यद्यत्**<br>**யத்³யத்** | = | எதெது, |
| **स्मृतिसीम्नि**<br>**ஸ்ம்ருதிஸீம்னி** | = | ஞாபகத்தில், |
| **पतत् अपि**<br>**பதத் அபி** | = | விழுந்தாலும், |
| **जडधियः अपि**<br>**ஜட³தி⁴ய: அபி** | = | மந்த புத்தி உள்ளவனுக்கும் கூட, |
| **हृदि**<br>**ஹ்ருதி³** | = | மனத்தில், |
| **ह्रियं**<br>**ஹ்ரியம்** | = | வெட்கத்தை, |
| **सधः**<br>**ஸத⁴:** | = | உடனே, |
| **प्रसूते**<br>**ப்ரஸூதே** | = | உண்டு பண்ணுகிறதோ, |
| **तत्तत्**<br>**தத்தத்** | = | அதது, |
| **कृतं**<br>**க்ருதம்** | = | செய்யப்பட்டது. |

இப்படிப் பிறந்த பிறகு அஜ்ஞானத்தில் மூழ்கினேன். மருகங்களைப்போல் ஐந்து ஆறு வருஷங்கள் அறிவற்ற குழந்தைப் பருவத்தில் கழிந்தன. அப்போது நான்

செய்த காரியங்களை நினைத்தாலும் மந்த புத்தியுள்ளவனும் வெட்கம் அடைவான். [கிடந்த இடத்தில் மல விஸர்ஜனம் முதலியவைகளைச் செய்வதால் குழந்தைப் பருவத்தை மிருக வாழ்க்கைக்கு ஒப்பிடுகிறுர். பிற்காலத்தில் நினைத்து வெட்கம் அடையக்கூடிய சேஷ்டைகள் ஸ்தன்யபானம் முதலியவை].

**आसाद्य यौवनमथो बहुभिः प्रकारैः**
**शृङ्गारभङ्गन्यनुगुणैर्गुणिताविवेकः ।**
**जातोऽस्मि घोरनरकाचहकर्मयोगाद्**
**भोगाशया प्रशमितोभयलोकशुद्धिः ॥ १० ॥**

**ஆஸாத்3ய யௌவனமதோ2 ப3ஹுபி4: ப்ரகாரை:**
**ஶ்ருங்கா3ரப4ங்க3ன்யனுகு3ணைர்கு3ணிதாவிவேக: ।**
**ஜாதோ(அ)ஸ்மி கோ4ரநரகாசஹகர்மயோகா3த்3**
**போ4கா3ஶயா ப்ரஶமிதோப4யலோகஶுத்3தி4: ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **अथ**<br>**அத2** | = | பிறகு, |
| **यौवनम्**<br>**யௌவனம்** | = | யௌவனப் பருவத்தை |
| **आसाद्य**<br>**ஆஸாத்3ய** | = | அடைந்து, |
| **शृङ्गार-भङ्गि अनुगुणैः**<br>**ஶ்ருங்கா3ர-ப4ங்கி3 அனுகு3ணை:** | = | சிருங்கார விலாஸத்திற்குத் தகுதியான, |
| **बहुभिः**<br>**ப3ஹுபி4:** | = | பல, |
| **प्रकारैः**<br>**ப்ரகாரை:** | = | வழிகளால், |
| **गुणित-अविवेकः**<br>**கு3ணித-அவிவேக:** | = | அதிகப்படுத்தப்பட்ட அவிவேகத்தை உடையவனுய், |
| **भोगाशया**<br>**போ4கா3ஶயா** | = | சிற்றின்ப ஆசையால், |
| **घोर-नरक-आवह-कर्म-योगात्**<br>**கோ4ர-நரக-ஆவஹ-கர்ம-யோகா3த்** | = | கடுமையான நகரத்தைத் தரும் செயலின் சேர்க்கையால், |
| **प्रशमित-उभय-लोक-शुद्धिः**<br>**ப்ரஶமித-உப4ய-லோக-ஶுத்3தி4:** | = | இம்மை மறுமை இரண்டிற்கும் ஸாதகமான சுத்தியை இழந்தவனுக |

**जातः अस्मि** = ஆனேன்.
**ஜாதஃ அஸ்மி**

பிறகு யௌவனப் பருவத்தை அடைந்தேன். பல விதத்திலும் காம சேஷ்டைகளில் ஈடுபட்டேன். ச்ருங்கார லீலைகளில் ஆழ்ந்து விட்டதால் அவிவேகம் அதிகரித்தது. காம வேட்கையால் நரகத்தில் கொண்டு சேர்ப்பிக்கும் காரியங்களை அனுஷ்டித்தேன். இம்மையிலும் மறுமையிலும் சுகத்திற்குக் காரணமாகிய ஸதாசாரத்தையும் அதனால் உண்டாகும் சுகத்தையும் இழந்தேன்.

**मोहात्कृतः परिणयोऽप्यनयो महीयान्**
**मूलं समस्तभवबन्धनदुर्गतीनाम् ।**
**यस्मादुदेत्य दुरपत्यजनेन सृष्ट**
**स्नेहोऽस्मि वेष्टित इवोत्कटनागपाशैः ॥ ११ ॥**

**மோஹாத்க்ருதஃ பரிணயோ(அ)ப்யனயோ மஹீயான்**
**மூலம் ஸமஸ்தப⁴வப³ந்த⁴னது³ர்க³தீனாம் ।**
**யஸ்மாது³தே³த்ய து³ரபத்யஜனேன ஸ்ருஷ்ட**
**ஸ்னேஹோ(அ)ஸ்மி வேஷ்டித இவோத்கடநாக³பாஶைஃ ॥ 11 ॥**

**मोहात्** = அவிவேகத்தால்,
**மோஹாத்**
**समस्त-भव-बन्धन** = ஸம்ஸாரத்தின் எல்லாக் கட்டுக்களுக்கும்
**ஸமஸ்த-ப⁴வ-ப³ந்த⁴ன** கேடுகளுக்கும் மூலகாரணமானதும்,
**महीयान् अनयः** = மிகவும் தவறான காரியமுமான,
**மஹீயான் அனயஃ**
**परिणयः अपि** = விவாஹமும்,
**பரிணயஃ அபி**
**कृतः** = செய்துகொள்ளப்பட்டது,
**க்ருதஃ**
**यस्मात् उदेत्य** = எந்த விவாஹத்திலிருந்து மேல்
**யஸ்மாத் உதே³த்ய** எழுந்து (எழுந்த)
**दुरपत्य-जनेन** = கெட்ட குழந்தைகளோடு,
**து³ரபத்ய-ஜனேன**
**उत्कट-नाग-पाशैः** = மிகவும் கடுமையான நாக
**உத்கட-நாக³-பாஶைஃ** பாசங்களினால்,
**वेष्टितः इव** = கட்டுப்பட்டவன் போல்,
**வேஷ்டிதஃ இவ**

**सृष्ट-स्नेहो: अस्मि** = பற்றை உண்டு பண்ணிக்
**ஸ்ருஷ்ட-ஸ்னேஹோ: அஸ்மி** கொண்டவன் ஆனேன்.

பிறகு கல்யாணம் செய்து கொண்டேன். கல்யாணம் செய்து கொள்வதைவிட மிகவும் தவறான காரியம் வேறு என்ன இருக்கிறது? ஸம்ஸார பந்தத்தினுல் உண்டாகும் ஸமஸ்த கஷ்டங்களுக்கும் அதுவே மூலம் அந்தக் கல்யாணத்தின் பயனாக குழந்தைகள் உண்டாயின. அந்தக் குழந்தைகளிடத்தில் ஸ்நேகம் வைக்கலானேன். கடுமையான நாக பாசத்தால் கட்டுப்பட்டவன் போல் நான் இந்த ஸ்நேஹத்தால் ஸம்ஸாரத்தில் கட்டுண்டவன் ஆனேன்.

**तत्पोषणाय विदुषाऽपि मया समस्तम्**
**औचित्यमुज्झितवताऽऽत्तवता कुकृत्यम् ।**
**द्वारि श्ववल्लडितमेव कदीश्वराणां**
**सोढावमानशतविक्लवमानसेन ॥ १२ ॥**

**தத்போஷணய விது³ஷா(அ)பி மயா ஸமஸ்தம்**
**ஔசித்யமுஜ்ஜி²தவதா(ஆ)த்தவதா குக்ருத்யம் ।**
**த்³வாரி ஶ்வவல்லடி³தமேவ கதீ³ஶ்வராணும்**
**ஸோடா⁴வமானஶதவிக்லவமானஸேன ॥ 12 ॥**

**तत्-पोषणाय** = அந்த மனைவிமக்களின் ரக்ஷணத்திற்காக,
**தத்-போஷணய**
**विदुषा अपि** = அறிந்தவனுய் இருந்தும்,
**விது³ஷா அபி**
**समस्तम् औचित्यं** = தகுதி (உசிதமான தன்மை)
**ஸமஸ்தம் ஔசித்யம்** எல்லாவற்றையும்,
**उज्झितवता** = விட்டவனாயும்,
**உஜ்ஜி²தவதா**
**कुकृत्यम्** = கெட்ட காரியங்களையும்,
**குக்ருத்யம்**
**आत्तवता** = பொறுத்துக்கொள்ளப்பட்ட பல
**ஆத்தவதா** அவமானங்களால் துன்புற்ற மனதுடையவனுமான,
**मया** = என்னுல்,
**மயா**

| | | |
|---|---|---|
| **कदीश्वराणां द्वारि**<br>**கதீ³ஶ்வராணும் த்³வாரி** | = | அல்பமான யஜமானர்களின் வாசலில், |
| **श्ववत्**<br>**ஶ்வவவத்** | = | நாய் போல் |
| **लडितम्**<br>**லடி³தம்** | = | எளிமையுடன் நிற்கப்பட்டது. |

**लडितम्** (**லடி³தம்**) என்பது நாய் நாக்கைத் தொங்க விட்டுக்கொண்டு நிற்கும் நிலைமையைக் குறிக்கும்.

நல்வழி இதுதான் என்று அறிந்திருந்தேன். அப்படி அறிந்தும் மனைவியையும் மக்களையும் காப்பாற்றுவதற்குப் பல தீச்செயல்களையும் செய்யலானேன். நல்வழியை முற்றும் துறந்தேன். அற்பர்கள் வாசலில் நாய்போல் ஏங்கி நின்றேன். அற்பர்கள் செய்த அவமானங்களையும் பொறுத்துக் கொண்டேன்.

**प्राणाधिकैरथ वियोगमवाप्य तैस्तैः**
**इष्टैररुंतुद विषादवशंवदेन मया ।**
**स्त्रीवन्मया विलपितं विहितं न किंचित्**
**कृत्यं सतां समुचितं हहहा हतोऽस्मि ॥ १३ ॥**

**ப்ராணுதி⁴கைரத² வியோக³மவாப்ய தைஸ்தைः**
**இஷ்டைரருந்துத³ விஷாத³வஶம்வதே³ன மயா ।**
**ஸ்த்ரீவன்மயா விலபிதம் விஹிதம் ந கிஞ்சித்**
**க்ருத்யம் ஸதாம் ஸமுசிதம் ஹஹஹா ஹதோ(அ)ஸ்மி ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **अथ**<br>**அத²** | = | பிறகு, |
| **प्राणाधिकैः**<br>**ப்ராணுதி⁴கைः** | = | உயிரைவிட மேலான, |
| **तैः तैः इष्टै**<br>**தைः தைः இஷ்டை** | = | அந்த அந்த வேண்டியவர்களிடமிருந்து, |
| **वियोगम्**<br>**வியோக³ம்** | = | பிரிவை, |
| **अवाप्य**<br>**அவாப்ய** | = | அடைந்து, |
| **अरुंतुद-विषादवशंवदेन मया**<br>**அருந்துத³-விஷாத³வஶம்வதே³ன மயா** | = | மர்மத்தை அறுக்கும் துயருக்கு ஆளாகி, என்னுல், |

| | | |
|---|---|---|
| स्त्रीवत् | = | பெண்போல், |
| ஸ்த்ரீவத் | | |
| विलपितं | = | அழப்பட்டது, |
| விலபிதம் | | |
| सतां | = | ஸாதுக்களுக்கு, |
| ஸதாம் | | |
| समुचितं | = | தகுந்த, |
| ஸமுசிதம் | | |
| कृत्यं | = | கார்யம், |
| க்ருத்யம் | | |
| किंचित् | = | ஒன்றும், |
| கிஞ்சித் | | |
| न विहितं | = | செய்யப்படவில்லை, |
| ந விஹிதம் | | |
| हहहा | = | அந்தோ! அந்தோ! |
| ஹஹஹா | | |
| हत: अस्मि | = | நான் தொலைந்தவனானேன். |
| ஹத꞉ அஸ்மி | | |

என் உயிரைவிட நான் மேலாகப் போற்றி வந்தவர்களும் காலக்கிரமத்தில் என்னைவிட்டுப் பிரிந்து யமவுலகம் அடைந்தார்கள். அவர் பிரிவாற்றுமையினால் மிகவும் கொடுமையான துன்பங்களுக்கு உள்ளானேன். பெண்பாலர்போல் வாய் விட்டு அழுதேன். ஜன்மம் எடுத்து ஸாதுக்கள் செய்யும் நல்ல காரியங்கள் எதையும் நான் செய்யவில்லை. அந்தோ! கெட்டுவிட்டேனே!

**सांसारिकेषु विषयेषु निपत्य राग -**
**द्वेपैकनिष्टहृदयो भगवन्नभूवम् ।**
**आसीददन्तकभयप्रतिकूलवृत्ति**
**किंचिन्मया न रचितं विदितं न वापि ॥ १४ ॥**

**ஸாம்ஸாரிகேஷு விஷயேஷு நிபத்ய ராக[3]-**
**த்[3]வேஷைகநிஷ்ட[2]ஹ்ருத[3]யோ ப[4]க[3]வன்னபூ[4]வம் ।**
**ஆஸீத[3]த[3]ந்தகப[4]யப்ரதிகூலவ்ருத்தி**
**கிஞ்சின்மயா ந ரசிதம் விதி[3]தம் ந வாபி ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| हे भगवन् | = | ஏ ஸ்வாமியே! |
| ஹே ப[4]க[3]வன் | | |
| सांसारिकेषु विषयेषु | = | ஸம்ஸார ஸம்பந்தமான விஷயங்களில், |

**ஸாம்ஸாரிகேஷு விஷயேஷு**

| | | |
|---|---|---|
| **निपत्य** <br> **நிபத்ய** | = | விருப்பு வெறுப்பு இவ்விரண்டிலேயே நிலைத்த மனத்தை உடையவனாய், |
| **अभूवम्** <br> **அபூ⁴வம்** | = | ஆனேன். |
| **आसीदद्-अन्तक-भय-प्रतिकूल-वृत्ति** <br> **ஆஸீத³த்³-அந்தக-ப⁴ய-ப்ரதிகூல-வ்ருத்தி** | = | நெருங்கிக்கொண்டிருக்கும் யமனால் உண்டாகும் பயத்திற்கு எதிரிடையாக, |
| **किंचित्** <br> **கிஞ்சித்** | = | யாதொன்றும், |
| **मया** <br> **மயா** | = | என்னால், |
| **न रचितं** <br> **ந ரசிதம்** | = | செய்யப்படவில்லை. |
| **न वा विदितं अपि** <br> **ந வா விதி³தம் அபி** | = | அல்லது அறிந்து கொள்ளப்படவும் இல்லை. |

ஸம்ஸார ஸம்பந்தமான விஷயங்களிலேயே நான் ஈடுபட்டுவிட்டேன். அதனால் உண்டான விருப்பு வெறுப்புக்களில் மூழ்கினேன். யமன் ஸமீபித்து வருகிறான் என்பதைக் கவனிக்கவும் இல்லை. அந்த யமனைத் தடுப்பதற்கு உரிய காரியங்கள் எதையும் நான் செய்யவில்லை; யமன் வராமல் தடுப்பதற்கு உரிய மார்க்கத்தையும் தெரிந்து கொள்ளவும் இல்லை.

**इत्थं न किं व्यवहृतं न किमुक्तमात्तम्**
**किं वा न किं न कलितं ललितं न वापि ।**
**सर्वत्र तत्र शरणं कृपणस्य मे त्वम्**
**एह्येहि देहि चरणं शिरसीन्दुमौले ॥ १५ ॥**

**இத்த²ம் ந கிம் வ்யவஹ்ருதம் ந கிமுக்தமாத்தம்**
**கிம் வா ந கிம் ந கலிதம் லலிதம் ந வாபி ।**
**ஸர்வத்ர தத்ர ஶரணம் க்ருபணஸ்ய மே த்வம்**
**ஏஹ்யேஹி தே³ஹி சரணம் ஶிரஸீந்து³மௌலே ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **हे इन्दुमौले** <br> **ஹே இந்து³மௌலே** | = | முடியில் சந்திரனை தரிப்பவரே! |
| **इत्थं** <br> **இத்த²ம்** | = | இந்த மாதிரி, |

| | | |
|---|---|---|
| **किं न व्यवहृतं**<br>**கிம் ந வ்யவஹ்ருதம்** | = | எது செய்யப்படவில்லை? |
| **किं न उक्तम्**<br>**கிம் ந உக்தம்** | = | எது சொல்லப்படவில்லை? |
| **किं वा न आत्तम्**<br>**கிம் வா ந ஆத்தம்** | = | அல்லது எதுதான்<br>கைக்கொள்ளப்படவில்லை? |
| **किं न कलितं**<br>**கிம் ந கலிதம்** | = | என்ன தான் சேகரிக்கப்படவில்லை, |
| **किं न वापि ललितं**<br>**கிம் ந வாபி லலிதம்** | = | எந்த (ஆட்டம் தான்)<br>ஆடப்படவில்லை? |
| **सर्वत्र तत्र**<br>**ஸர்வத்ர தத்ர** | = | (மேற்கூறிய) அவை<br>எல்லாவற்றிலும், |
| **कृपणस्य मे**<br>**க்ருபணஸ்ய மே** | = | தீனனாகிய எனக்கு. |
| **त्वम्**<br>**த்வம்** | = | நீர், |
| **शरणं**<br>**ஶரணம்** | = | புகலிடம், |
| **एहि एहि**<br>**ஏஹி ஏஹி** | = | வாரும் வாரும், |
| **शिरसी**<br>**ஶிரஸீ** | = | (என்) தலையில், |
| **चरणं देहि**<br>**சரணம் தே³ஹி** | = | (தங்களுடைய) பாதத்தை<br>வையுங்கள். |

மேற்கூறியபடி என் வாழ்நாள் முழுவதையும் வீணாகக் கழித்துவிட்டேனே? நான் என்ன தான் செய்யவில்லை? நான் என்னதான் சொல்லவில்லை? நான் என்ன தான் கைக்கொள்ளவில்லை? எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தால் தீனனாகிய எனக்கு நீரே கதி. ஏ சந்திரசேகர! நீர்தான் வந்து உம்முடைய இரண்டு பாதங்களையும் என் தலையில் வைத்து என்னைக் காப்பாற்ற வேண்டும்.

**याः प्रोत्कटा भ्रुकुटयो यमकिंकराणाम्**
**पीडाश्च या नवनवा नरकावनीषु ।**
**ताश्चिन्तिता अपि भयाय ममाधुनैव**
**सोढास्मि ताः कथमहो विषमो विषादः ॥ १६ ॥**

**யா: ப்ரோத்கடா ப்⁴ருகுடயோ யமகிங்கராணும்
பீடா³ஶ்ச யா நவனவா நரகாவனீஷு ।
தாஶ்சிந்திதா அபி ப⁴யாய மமாது⁴னைவ
ஸோடா⁴ஸ்மி தா: கத²மஹோ விஷமோ விஷாத³: ॥ 16 ॥**

| | | |
|---|---|---|
| **यम-किंकराणाम्**<br>**யமகிங்கராணும்** | = | யமபடர்களுடைய, |
| **प्रोत्कटाः**<br>**ப்ரோத்கடா** | = | மிகவும் கடுமையான, |
| **याः भ्रुकुटयः**<br>**யா: ப்⁴ருகுடய:** | = | புருவநெரிப்புகள் எவைகள் உண்டோ, |
| **नरकावनीषु**<br>**நரகாவனீஷு** | = | நரக ப்ரதேசங்களில், |
| **या नवनवा पीडा**<br>**யா நவனவா பீடா³** | = | புதிது புதிதான துன்பங்கள் **எவைகள் உண்டோ,** |
| **ताः**<br>**தா:** | = | அவைகள், |
| **चिन्तिताः अपि**<br>**சிந்திதா: அபி** | = | நினைக்கப்பட்ட அளவிலேயே, |
| **मम**<br>**மம** | = | இப்பொழுதே, |
| **भयाय**<br>**ப⁴யாய** | = | பயத்தைக் கொடுக்கின்றனவாய் இருக்கின்றன. |
| **ताः**<br>**தா:** | = | அவைகளை, |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **सोढास्मि**<br>**ஸோடா⁴ஸ்மி** | = | சகிக்கப்போகிறேன்? |
| **अहो**<br>**அஹோ** | = | அந்தோ! |
| **विषादः**<br>**விஷாத³:** | = | (என்) துயரம், |
| **विषमः**<br>**விஷம:** | = | மிகவும் தாங்க முடியாமல் இருக்கிறது. |

யமகிங்கரர்கள் எவ்வளவு கடுமையாக விழித்துப் பார்த்து என்மீது அதிகாரத்தைச் செலுத்துவார்களோ. நரக ப்ரதேசங்களில் புதிது புதிதான எத்தகைய துன்பங்களை அனுபவிக்கவேண்டி வருமோ, இவைகளை எல்லாவற்றையும் நினைத்தால் இப்பொழுதே பயம் உண்டாகிறது அந்தோ! இந்தக் கஷ்டங்களை எப்படிச் சகிப்பேன் என் துயரம் மிகவம் தாங்க முடியாமல் இருக்கின்றது.

**भीतोऽसि दुर्गततमोऽस्मि कदर्थितोऽस्मि**
**पापोऽस्मि विस्मृतसदध्वपरिग्रहोऽस्मि ।**
**तत्केन केन न पथास्मि कृपास्पदं ते**
**मत्वेति शंकर यथोचितमाचरेथाः ॥ १७ ॥**

**பீ4தோ(அ)ஸி து3ர்க3ததமோ(அ)ஸ்மி கத3ர்தி2தோ(அ)ஸ்மி**
**பாபோ(அ)ஸ்மி விஸ்ம்ருதஸத3த்4வபரிக்3ரஹோ(அ)ஸ்மி ।**
**தத்கேன கேன ந பதா2ஸ்மி க்ருபாஸ்பத3ம் தே**
**மத்வேதி ஶங்கர யதோ2சிதமாசரேதா2: ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **हे शंकर** | = | ஏ சங்கர! |
| **ஹே ஶங்கர** | | |
| **भीतः अस्मि** | = | பயந்தவனாய் இருக்கிறேன்! |
| **பீ4த: அஸ்மி** | | |
| **दुर्गततमः अस्मि** | = | மிகவும் கேடு அடைந்தவனாய் |
| **து3ர்க3ததம: அஸ்மி** | | இருக்கிறேன். |
| **कदर्थितः अस्मि** | = | அவமதிக்கப்பட்டவனாய் |
| **கத3ர்தி2த: அஸ்மி** | | இருக்கிறேன். |
| **पापः अस्मि** | = | பாபியாய் இருக்கிறேன். |
| **பாப: அஸ்மி** | | |
| **विस्मृत-सद्-अध्व-परिग्रहः अस्मि** | = | நல்வழியைப் பின்பற்றுதலை |
| **விஸ்ம்ருத-ஸத்3-அத்4வ-பரிக்3ரஹ: அஸ்மி** | | மறந்தவனாக இருக்கிறேன். |
| **तत्** | = | ஆகையால், |
| **தத்** | | |
| **केन केन पथा** | = | எந்தெந்த வகையினால், |
| **கேன கேன பதா2** | | |
| **ते** | = | உமக்கு, |
| **தே** | | |
| **न कृपास्पदं अस्मि** | = | க்ருபைக்குப் பாத்திரனாக |
| **ந க்ருபாஸ்பத3ம் அஸ்மி** | | நான் ஆகவில்லை? |
| **इति मत्वा** | = | என்று யோசித்து, |

**இதி மத்வா**
**यथोचितम्** = உசிதப்படி,

**யதோ²சிதம்**
**आचरेथाः** = செய்யுங்கள்.

**ஆசரேதா²꞉**

இந்தப் பிரகாரம் என் வாழ்நாளைக் கழித்ததை யோசித்துப் பார்க்கையில் எனக்கு என்ன பயம் தான் உண்டாகவில்லை? மிகவும் கேடு அடைந்துவிட்டேன். மிக்க அவமதிப்புக்கு உள்ளாகிவிட்டேன். பாவியாய் இருக்கிறேன். ஸாதுக்களுடைய நல்வழியை மறந்துவிட்டேன். ஆகையால் எந்த விதத்திலும் நான் ஏன் தங்கள் கிருபைக்குப் பாத்திரன் ஆகவில்லை? என் நிலையை யோசித்து எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படித் தங்கள் இஷ்டப்படிச் செய்யுங்கள்.

இதில் கவி பாரம் முழுவதையும் சிவன் மேலேயே வைத்துச் சரணாகதியின் பராகாஷ்டையைக் காண்பித்து இருக்கிறார்.

**नो यत्र बन्धुरथ नैव पिता न माता**
**नो वा सुहृद्धृतिमुपेत्य विधातुमीष्टे ।**
**तास्वेत्य नाथ मम नारकभूषु कुर्याः**
**त्राणं त्वमेव हि जगत्सु दयार्द्रचेताः ॥ १८ ॥**

**நோ யத்ர ப³ந்து⁴ரத² நைவ பிதா ந மாதா**
**நோ வா ஸுஹ்ருத்³ருதிமுபேத்ய விதா⁴துமீஷ்டே ।**
**தாஸ்வேத்ய நாத² மம நாரகபூ⁴ஷு குர்யா꞉**
**த்ராணம் த்வமேவ ஹி ஜக³த்ஸு த³யார்த்³ரசேதா꞉ ॥ 18 ॥**

**हे नाथ** = ஏ ஸ்வாமி!

**ஹே நாத²**
**यत्र** = எந்த நரக பூமிகளில்,

**யத்ர**
**बन्धुः** = பந்துவானவன்,

**ப³ந்து⁴꞉**
**उपेत्य** = (என்னை) அணுகி,

**உபேத்ய**
**धृतिं** = (எனக்கு) தைர்யத்தை,

**த்⁴ருதிம்**
**विधातुं** = உண்டுபண்ணுவதற்கு,

**விதா⁴தும்**

| | | |
|---|---|---|
| नो ईष्टे<br>நோ ஈஷ்டே | = | சக்தியற்றவனே, |
| अथ नैव पिता<br>அத² நைவ பிதா | = | அல்லது பிதாவும் என்னை அணுகித் தைர்யத்தை உண்டுபண்ணுவதற்கு சக்தியற்றவரோ; |
| न माता<br>ந மாதா | = | தாயாரும் என்னை அணுகித் தைர்யத்தை உண்டுபண்ணுவதற்கு சிறிதும் சக்தியற்றவளோ; |
| नो वा सुहृत्<br>நோ வா ஸுஹ்ருத் | = | நண்பனும்கூட என்னை அணுகி தைர்யத்தை உண்டுபண்ணுவதற்கு சிறிதும் சக்தியற்றவனே; |
| तासु<br>தாஸு | = | அந்த, |
| नारकभूषु<br>நாரகபூ⁴ஷு | = | நரக பூமிகளில், |
| एत्य<br>ஏத்ய | = | (என்னிடம்) வந்து, |
| मम<br>மம | = | எனக்கு, |
| त्राणं<br>த்ராணம் | = | காப்பாற்றுதலை, |
| कुर्याः<br>குர்யா꞉ | = | செய்வீராக. |
| हि<br>ஹி | = | ஏனென்றால், |
| जगत्सु<br>ஜக³த்ஸு | = | உலகங்களில், |
| त्वम् एव<br>த்வம் ஏவ | = | நீர் ஒருவர்தான், |
| दयार्द्रचेताः<br>த³யார்த்³ரசேதா꞉ | = | கருணையால் நனைந்த சித்தத்தை யுடையவர் அன்றோ! |

நரகபூமிகளில் அணுகி எனக்குத் தைர்யத்தை உண்டு பண்ணுவதற்கு பந்துவும் இல்லை, தகப்பனும் இல்லை, தாயும் இல்லை, நண்பனும் இல்லை அந்த நரக பூமிகளில் என்னிடம் வந்து என்னைக் தாங்களே காப்பாற்ற வேண்டும். நீர் ஒருவர் தாம் ஸமஸ்த ஜகத்திலும் கருணையால் நனைந்த சித்தத்தை உடையவர் அன்றோ.

**भ्रष्टोऽस्मि यद्यपि सतां चरितात्तथापि**
**मां त्रातुमर्हसि कृतान्तभिया श्रयन्तम् ।**
**प्रह्वेषु विह्वलतया शरणागतेषु**
**नो साधवो विदधते सदसद्विवेकम् ॥ १९ ॥**

**ப்⁴ரஷ்டோ(அ)ஸ்மி யத்³யபி ஸதாம் சரிதாத்ததா²பி**
**மாம் த்ராதுமர்ஹஸி க்ருதாந்தபி⁴யா ஶ்ரயந்தம் ।**
**ப்ரஹ்வேஷு விஹ்வலதயா ஶரணாக³தேஷு**
**நோ ஸாத⁴வோ வித³த⁴தே ஸத³ஸத்³விவேகம் ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| **सतां** ஸதாம் | = | ஸாதுக்களுடைய, |
| **चरितात्** சரிதாத் | = | நடத்தையில் இருந்து, |
| **भ्रष्टः अस्मि यद्यपि तथाऽपि** ப்⁴ரஷ்ட꞉ அஸ்மி யத்³யபி ததா²(அ)பி | = | நழுவினவனாய் இருந்தபோதிலும், |
| **कृतान्त-भिया** க்ருதாந்த-பி⁴யா | = | யமனிடத்தில் உண்டான பயத்தால், |
| **श्रयन्तं** ஶ்ரயந்தம் | = | (உம்மைச்) சரணம் அடைந்த, |
| **मां** மாம் | = | என்னை, |
| **त्रातुम् अर्हसि** த்ராதும் அர்ஹஸி | = | காப்பாற்றக் கடமைப் பட்டவராய் இருக்கிறீர். |
| **विह्वलतया** விஹ்வலதயா | = | பயத்தினால், |
| **प्रह्वेषु** ப்ரஹ்வேஷு | = | வணங்கினவர்களாயும், |
| **शरणागतेषु** ஶரணாக³தேஷு | = | சரணம் அடைத்தவர்களாயும் இருக்கின்றவர்களிடத்தில், |
| **सद्-असद्-विवेकम्** ஸத்³-அஸத்³-விவேகம் | = | சரணம் அடைந்தவர்கள் நல்லாரோ தீயாரோ என்று பகுத்துப்பார்ப்பதை, |
| **साधवः** ஸாத⁴வ꞉ | = | ஸாதுக்கள், |
| **नो विदधते** நோ வித³த⁴தே | = | செய்கிறதில்லை. |

ஸாதுக்களுடைய மார்க்கத்தில் இருந்து நழுவி விட்டேன். அப்படி யிருந்தும் யமனிடத்தில் உண்டான பயத்தால் சரணம் அடைந்திருக்கிறேன். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். பயத்தால் வணங்கிச் சரணுகதி அடைந்தவர்களுள், சரண அடைந்தவன் நல்லவனு கெட்டவனு என்ற பாகுபாடு செய்வதுண்டா? இந்தப் பாகுபாட்டைப் பெரியோர்கள் செய்வதில்லை யன்றோ?

ஸ்ரீமத் ராமாயணத்தில் இதே விஷயம் ராகவன் வாயால் வெளியாகியிருக் கிறது. விபீஷண அபயப்ரதான கட்டத்தில்

**मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन ।**
**दोषो यद्यपि तस्य स्यात्सतामेतदगर्हितम् ॥**

**மித்ரபா⁴வேன ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத²ஞ்சன ।**
**தோ³ஷோ யத்³யபி தஸ்ய ஸ்யாத்ஸதாமேதத³க³ர்ஹிதம் ॥**

யுத்தகாண்டம் 18.3.

என்று ராமர் சொல்லி யிருக்கிறுர்.

காளிதாஸரும்

**क्षुद्रेऽपि नूनं शरणं प्रपन्ने**
**ममत्वमुच्चैः शिरसां सतीव ॥**

**க்ஷுத்³ரே(அ)பி நூனம் ஶரணம் ப்ரபன்னே**
**மமத்வமுச்சை꞉ ஶிரஸாம் ஸதீவ ॥**

குமார ஸம்பவம் I, 12

என்று சொல்லுகிறுர்.

**येष्वन्धकारनिकरेण करालिता भूः**
**यत्र ज्वलन्ति नरकेष्वनिशं हुताशाः ।**
**धामत्रयीनयन निर्जरसिन्धुमूर्धन्**
**तत्रेतरस्त्वमिव कः शरणं नराणाम् ॥ २० ॥**

**யேஷ்வந்த⁴காரநிகரேண கராலிதா பூ⁴꞉**
**யத்ர ஜ்வலந்தி நரகேஷ்வநிஶம் ஹுதாஶா꞉ ।**
**தா⁴மத்ரயீநயன நிர்ஜரஸிந்து⁴மூர்த⁴ன்**
**தத்ரேதரஸ்த்வமிவ க꞉ ஶரணம் நராணும் ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **येषु नरकेषु** <br> **யேஷு நரகேஷு** | = | எந்த நரகங்களில்; |
| **भूः** <br> **பூ⁴꞉** | = | ப்ரதேசம் |

| | | |
|---|---|---|
| अन्धकारनिकरेण<br>அந்த⁴காரநிகரேண | = | இருட்கூட்டத்தால், |
| करालिता<br>கராலிதா | = | பயங்கரமாகச் செய்யப்பட்டிருக்கின்றதோ, |
| यत्र नरकेषु<br>யத்ர நரகேஷு | = | எந்த நரகங்களில், |
| हुताशाः<br>ஹுதாஶா꞉ | = | அக்னிகள், |
| अनिशं<br>அநிஶம் | = | எப்போதும், |
| ज्वलन्ति<br>ஜ்வலந்தி | = | ஜ்வலிக்கின்றனவோ, |
| तत्र नारकभूषु<br>தத்ர நாரகபூ⁴ஷு | = | அந்த நரக ப்ரதேசங்களில், |
| हे धाम-त्रयी-नयन<br>ஹே தா⁴ம-த்ரயீ-நயன | = | சந்திரன் சூரியன் அக்னி இம் மூன்று தேஜஸ்ஸுகளையும் கண்களாக உடையவரே! |
| हे निर्जर-सिंन्धु-मूर्धन्<br>ஹே நிர்ஜர-ஸிம்ந்து⁴-மூர்த⁴ன் | = | தேவந்தியான கங்கையைத் தலையில் தரித்துக்கொண்டு உள்ளவரே! |
| त्वम् इव<br>த்வம் இவ | = | உம்மைப்போல், |
| इतरः कः<br>இதர꞉ க꞉ | = | வேறு யார், |
| नराणाम्<br>நராணாம் | = | மனிதர்களுக்கு, |
| शरणं<br>ஶரணம் | = | சரணம் ஆவார்? |

நான் உழலவேண்டிய நரகங்களைப்பற்றி என்ன கூறுவது? அங்குச் சில விடங்களில் இருட்கூட்டங்கள் பயத்தை உண்டுபண்ணுகின்றன. இன்னும் சில விடங்களில் அக்னி ஜ்வாலைகள் பற்றி எரிகின்றன. இவைகளில் தவிக்காமல் தப்பிப்பதற்குச் சரண்புகவேண்டியவர் நீங்கள் தானே. உங்களைத் தவிர மற்று யாரைச் சரணம் அடைகிறது? இருட்டைப்போக்க தாங்கள் சந்திரன் சூரியன் அக்னி என்ற மூன்று தேஜஸ்ஸுகளையும் கண்ணாகவுடையவர் அன்றோ? அக்னிஜ்வாலையை அணைப்பதற்கு தாங்கள் தேவகங்கையைத் தலையிலேயே தரித்துக்கொண்டு இருக்கிறீர்கள். ஆகையால் உம்மைத்தான் சரணம் அடைகிறேன்.

கவி, சிவனை முக்கண்ணன் என்றும் கங்காதரர் என்றும் அழைத்தது இந்த ச்லோகத்தில் மிகவும் பொருத்தமாய் இருக்கிறது.

**प्राग्यावदिन्द्रियगणः पटुशक्तिरासीत्**
**स्वामिन् स तावदगमद्विषयेषु निष्ठाम् ।**
**शक्तिक्षयेऽद्य स कथं भजते भवन्तं**
**जन्मेति मे विफलमीश किमाः करोमि ॥ २१ ॥**

**ப்ராக்[3]யாவதி[3]ந்த்[3]ரியக[3]ணः படுஶக்திராஸீத்**
**ஸ்வாமின் ஸ தாவத[3]க[3]மத்[3]விஷயேஷு நிஷ்டா[2]ம் ।**
**ஶக்திக்ஷயே(அ)த்[3]ய ஸ கத[2]ம் ப[4]ஜதே ப[4]வந்தம்**
**ஜன்மேதி மே விப[2]லமீஶ கிமாः கரோமி ॥ 21 ॥**

**हे स्वामिन्** = ஏ ஸ்வாமின்!
**ஹே ஸ்வாமின்**
**प्राग्** = முன்பு,
**ப்ராக்[3]**
**इन्द्रियगणः** = இந்திரியஸமூஹம்,
**இந்த்[3]ரியக[3]ணः**
**यावत्** = எதுவரையில்,
**யாவத்**
**पटु-शक्तिः** = வல்லமை உடையதாக,
**படு-ஶக்திः**
**आसीत्** = இருந்ததோ,
**ஆஸீத்**
**तावत्** = அது வரையில்,
**தாவத்**
**सः** = அந்த இந்திரிய ஸமூஹம்,
**ஸः**
**विषयेषु** = சிற்றின்பங்களில்,
**விஷயேஷு**
**निष्ठाम् अगमत्** = நிலைத்திருந்தது,
**நிஷ்டா[2]ம் அக[3]மத்**
**अद्य** = இப்பொழுது,
**அத[4]**
**शक्तिक्षये** = சக்தி குறைந்தபொழுது,
**ஶக்திக்ஷயே**

| | | |
|---|---|---|
| **सः**<br>**ஸ:** | = | அந்த இந்திரிய ஸமூஹம், |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **भवन्तं**<br>**ப⁴வந்தம்** | = | உம்மை, |
| **भजते**<br>**ப⁴ஜதே** | = | பஜிக்கும்? |
| **इति**<br>**இதி** | = | இந்தப் ப்ரகாரம், |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **जन्म**<br>**ஜன்ம** | = | ஜன்மமானது, |
| **विफलम्**<br>**விப²லம்** | = | பாழ் ஆயிற்று, |
| **हे ईश**<br>**ஹே ஈஶ** | = | ஏ நாத! |
| **आः किं करोमि**<br>**ஆ: கிம் கரோமி** | = | அந்தோ, என்ன செய்வேன்! |

ஏ ஸ்வாமின்! முன்பு என்னுடைய இளம்பிராயத்தில் என்னுடைய இந்திரிய ஸமூகங்கள் வல்லமை உடையனவாய் இருந்தன. அந்தக்காலங்களில் என் இந்திரியங்கள் சிற்றின்பத்தில் நிலைத்திருந்தன. பிறகு வயது ஆனதும் இந்திரியங்களின் சக்தி குறைந்தது. இப்பாழுது அவைகள் உம்மை எப்படி பஜிக்கும்? இம்மாதிரி ஆகிவிட்டபடியால் என் ஜன்மம் வீணாய்விட்டது. ஏ நாத! ஐயோ! நான் என்ன செய்வேன்? கரணங்கள் படுவாக இருக்கும்பொழுதே பகவத் பஜனை செய்ய வேண்டும்.

**नादायि दानमथ नैव तपो व्यधायि**
**नासेवि तीर्थदिंगसाध्यतरः समाधिः ।**
**तत्काऽपरत्र गतिरस्त्यनवाप्तपुण्य**
**ज्ञानस्य मे भव भवत्स्मृतिमन्तरेण ॥ २२ ॥**

**நாதா³யி தா³னமத² நைவ தபோ வ்யதா⁴யி**
**நாஸேவி தீர்த²தி³ங்க³ஸாத்⁴யதர: ஸமாதி⁴: ।**
**தத்கா(அ)பரத்ர க³திரஸ்த்யனவாப்தபுண்ய**
**ஜ்ஞானஸ்ய மே ப⁴வ ப⁴வத்ஸ்ம்ருதிமந்தரேண ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **दानम्** <br> **தா³னம்** | = | தானமானது, |
| **न अदायि** <br> **ந அதா³யி** | = | கொடுக்கப்படவில்லை. |
| **तपः** <br> **தப:** | = | தபஸ்ஸும், |
| **न एव व्यधायि** <br> **ந ஏவ வ்யதா⁴யி** | = | செய்யப்படவே இல்லை. |
| **तीर्थदिक्** <br> **தீர்த²தி³க்** | = | (கங்கா, ஸேது முதலிய) தீர்த்தங்களின் திக்கும் கூட, |
| **न असेवि** <br> **ந அஸேவி** | = | ஸேவிக்கப்படவில்லை, |
| **समाधिः** <br> **ஸமாதி⁴:** | = | யோக ஸ்மாதியோ, |
| **असाध्यतरः** <br> **அஸாத்⁴யதர:** | = | (மேற்கூறிய தானம், தபஸ், தீர்த்த யாத்திரைகளைவிட) மிகவும் ஸாதிக்க முடியாதது. |
| **तत्** <br> **தத்** | = | ஆகையால், |
| **अनवाप्त-पुण्य-ज्ञानस्य** <br> **அனவாப்த-புண்ய-ஜ்ஞானஸ்ய** | = | புண்ணியமும் ஞானமும் அடையாத எனக்கு, |
| **हे भव** <br> **ஹே ப⁴வ** | = | ஏ பரமேச்வர! |
| **भवत्स्मृतिम्** <br> **ப⁴வத்ஸ்ம்ருதிம்** | = | உம்முடைய ஞாபகத்தைத் தவிர, |
| **अपरत्र** <br> **அபரத்ர** | = | வேறு, |
| **का गतिः** <br> **கா க³தி:** | = | எந்த கதி, |
| **अस्ति** <br> **அஸ்தி** | = | இருக்கிறது? |

நான் தானம் ஒன்றும் செய்யவில்லை. தபஸும் செய்யவில்லை. புண்ணிய தீர்த்தங்கள் இருக்கும் திக்கைக் குறித்தும் கூட என்மனம் நாடவில்லையே? தானம் தபஸ் தீர்த்தயாத்திரை இவைகள் எல்லாவற்றைவிட அடைவதற்கு மிகவும் அரியதான யோக ஸமாதி எனக்கு எப்படி ஹித்திக்கும்? நான் கர்ம மார்க்கத்தை யாவது ஞான மார்க்கத்தையாவது அனுஷ்டிக்கவில்லையே. உம்மை மனத்தில்

நினைத்துத்தான் நல்ல கதி அடையவேண்டும். உம்முடைய தியானம் தவிர வேறு கதி ஒன்றும் எனக்கு இந்தக் கடைசிக்காலத்தில் இல்லை.

**कालान्न मे भयमथो कनके न लिप्सा**
**नैवास्मि शैशववशेन पयः पिपासुः ।**
**त्वध्दर्शनाय तु शिव स्पृहयामि लोभात्**
**तत्रापि किं तव न वा सुकरः प्रकारः ॥ २३ ॥**

**காலான்ன மே ப⁴யமதோ² கனகே ந லிப்ஸா**
**நைவாஸ்மி ஶைஶவவஶேன பய꞉ பிபாஸு꞉ ।**
**த்வத்⁴த³ர்ஶனாய து ஶிவ ஸ்ப்ருஹயாமி லோபா⁴த்**
**தத்ராபி கிம் தவ ந வா ஸுகர꞉ ப்ரகார꞉ ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **हे शिव**<br>**ஹே ஶிவ** | = | ஏ! பரமசிவ |
| **कालात्**<br>**காலாத்** | = | யமனிடத்திலிருந்து, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **न भयम्**<br>**ந ப⁴யம்** | = | பயம் இல்லை. |
| **अथो**<br>**அதோ²** | = | மேலும், |
| **कनके**<br>**கனகே** | = | ஸ்வர்ணத்தில், |
| **न लिप्सा**<br>**ந லிப்ஸா** | = | அடையவேண்டும் என்ற ஆசையும் இல்லை. |
| **शैशव-वशेन**<br>**ஶைஶவ-வஶேன** | = | குழந்தைப் பருவத்தில், |
| **पयः पिपासुः**<br>**பய꞉ பிபாஸு꞉** | = | பாலைக்குடிக்கவேண்டும் என்ற ஆசை உள்ளவனாகவும், |
| **न एव**<br>**ந ஏவ** | = | இல்லை இல்லை. |
| **लोभात्**<br>**லோபா⁴த்** | = | பேராசையால், |
| **त्वध्दर्शनाय**<br>**த்வத்⁴த³ர்ஶனாய** | = | உம்முடைய தர்சனத்திற்காக, |

**स्पृहयामि** = ஆசைப்படுகிறேன்.
**ஸ்ப்ருஹயாமி**

**तत्रापि** = அந்த விஷயத்தில் கூட,
**தத்ராபி**

**प्रकारः** = ஒரு வழி,
**ப்ரகாரஃ**

**तव** = உமக்கு,
**தவ**

**किं न वा सुकरः** = ஸுலபமாகச் செய்துவைக்க
**கிம் ந வா ஸுகரஃ** முடியாதா?

எனக்கு, தாங்கள் மற்ற பக்தர்களுக்குச் செய்த உதவி செய்ய வேண்டாம். ஒரு பக்தருக்கு யமனுடைய பயத்தை நீக்கினீர். ஒரு பக்தருக்கு, வேண்டிய பொன் கொடுத்து உதவினீர். மற்றும் ஒருவருக்குச் சிறு வயதில் பால் கொடுக்கச்செய்து அனுக்ரஹம் செய்தீர்கள். நான் இப்படி எதையாவது கேட்கின்றேனு? ஒன்றும் இல்லையே. நான் விரும்புவதெல்லாம் தங்கள் தர்சனம் மட்டும் தானே. இதைத் தாங்கள் லகுவாய்ச் செய்துவைக்க முடியாதா?

**குறிப்பு: ச்வேதன்** என்ற ராஜருஷி யம பயத்தினின்றும் பரமேச்வரனுல் விடுவிக்கப்பட்டான்; **மருத்தன்** என்ற அரசன் தபஸ்ஸினுல் சிவனை த்ருப்தி செய்வித்துத் தன் நகரத்தில் சிவன் அருளால் ஏழு நாட்கள் பொன்மழை ஏற்படும்படி செய்து கொண்டான்; **உபமன்யு** என்ற முனி குமாரன் பால் பருகவேண்ட க்ஷீரஸமுத்ரத்தையே சிவன் அருளினுர். மார்க்கண்டேயருக்கு யமனை உதைத்து அபயம் அளித்ததும், **சுந்தரமூர்த்தி** நாயனுருக்கு வேண்டும் போதெல்லாம் பொன் அளித்ததும், **திருஞானசம்பந்தருக்குச்** சீர்காழியில் அம்பிகையின் திருமுலைப்பால் தருவித்ததும் எல்லோரும் நன்கு அறிந்ததே.

**यज्जन्म दुर्लभमुशन्ति मनुष्यलोके**
**तत्प्राप्तमप्यतनुपूर्वशुभप्रभावात् ।**
**जातं वृथैव मम यत्र मुहुः कदाऽपि**
**नैवान्वभावि भवदर्चनभक्तिसौख्यम् ॥ २४ ॥**

**யஜ்ஜன்ம து³ர்லப⁴முஶந்தி மனுஷ்யலோகே**
**தத்ப்ராப்தமப்யதனுபூர்வஶுப⁴ப்ரபா⁴வாத் ।**
**ஜாதம் வ்ருதை²வ மம யத்ர முஹுஃ கதா³(அ)பி**
**நைவான்வபா⁴வி ப⁴வத³ர்சனப⁴க்திஸௌக்²யம் ॥ 24 ॥**

**यत्** = எந்த,
**யத்**

| | | |
|---|---|---|
| **जन्म**<br>**ஜன்ம** | = | ஜன்மமானது, |
| **मनुष्यलोके**<br>**மனுஷ்யலோகே** | = | மனுஷ்ய லோகத்தில், |
| **दुर्लभम्**<br>**து³ர்லப⁴ம்** | = | கிடைத்தற்கு அரிது என்று, |
| **उशन्ति**<br>**உஶந்தி** | = | சொல்லுகிறார்களோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த ஜன்மமானது, |
| **अतनु-पूर्व-शुभ-प्रभावात्**<br>**அதனு-பூர்வ-ஶுப⁴-ப்ரபா⁴வாத்** | = | மிகவும் பெரியதான பூர்வஜன்ம புண்ணிய மகிமையினால், |
| **प्राप्तम् अपि**<br>**ப்ராப்தம் அபி** | = | (என்றால்) அடையப்பட்டிருந்தும், |
| **मुहुः यत्र**<br>**முஹு: யத்ர** | = | அடிக்கடி கிடைத்த எந்த மனுஷ்ய ஜன்மத்தில், |
| **कदाऽपि**<br>**கதா³(அ)பி** | = | ஒருபொழுதும், |
| **भवदर्चन-भक्ति-सौख्यम्**<br>**ப⁴வத³ர்சன-ப⁴க்தி-ஸௌக்²யம்** | = | உம்மைப் பூஜிப்பது பக்தி செய்வது இவற்றின் ஸௌக்கியம், |
| **न अन्वभावि**<br>**ந அன்வபா⁴வி** | = | (என்றால்) அனுபவிக்கப்பட வில்லையோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த என் மனுஷ்யஜன்மம், |
| **मम**<br>**மம** | = | எனக்கு, |
| **वृथा एव जातम्**<br>**வ்ருதா² ஏவ ஜாதம்** | = | வீணாகவே ஏற்பட்டது. |

நான் அடைந்திருக்கும் இந்த மனுஷ்ய ஜன்மத்தை யன்றோ கிடைத்தற்கு அரிது என்று சொல்லுகிறார்கள்? நான் ஏதோ முன்ஜன்மங்களில் செய்த புண்ணியத்தால் இந்த மனுஷ்ய ஜன்மத்தைப் பலமுறை அடைந்திருக்கிறேன். அப்படி அடைந்த மனுஷ்ய ஜன்மத்தில் உம்மைப் பூஜிக்கவும் இல்லை. உம்மிடம் பக்தி செய்யவும் இல்லை. ஆகையால் அந்தப் பூஜை பக்தி இவைகளால் உண்டாகும் ஸௌக்கியத்தையும் அடையவில்லை. ஆதலால் மானிட ஜன்மம் எனக்குக் கிடைத்ததும் வீணே.

**जातिर्महेश्वर भुजंगमपुंगवानाम्**
**स्तुत्या वरं भवदलंकृतिवाहकृत्यैः ।**
**मानुष्यकं तु मम धिकलया कयापि**
**यन्नोपयोगमगमत्त्वयि मच्छरीरम् ॥ २५ ॥**

**ஜாதிர்மஹேஶ்வர பு$^4$ஜங்க$^3$மபுங்க$^3$வானாம்**
**ஸ்துத்யா வரம் ப$^4$வத$^3$லங்க்ருதிவாஹக்ருத்யை: ।**
**மானுஷ்யகம் து மம தி$^4$கலயா கயாபி**
**யன்னோபயோக$^3$மக$^3$மத்த்வயி மச்ச$^2$ரீரம் ॥ 25 ॥**

| | | |
|---|---|---|
| **हे महेश्वर**<br>**ஹே மஹேஶ்வர** | = | ஏ பரமசிவ! |
| **भुजङ्गम-पुंगवानाम्**<br>**பு$^4$ஜங்க$^3$ம-புங்க$^3$வானாம்** | = | பாம்புகளினுடையவும் வ்ருஷபங்களினுடையவும், |
| **जातिः**<br>**ஜாதி:** | = | ஜாதியானது, |
| **भवद्-अलंकृति-वाह-कृत्यैः**<br>**ப$^4$வத்$^3$-அலங்க்ருதி-வாஹ-க்ருத்யை:** | = | உமக்கு அலங்காரமாகவும் வாஹன மாகவும் இருக்கும் கைங்கர்யங்களால், |
| **वरं स्तुत्या**<br>**வரம் ஸ்துத்யா** | = | மிகவும் ஸ்தோத்ரம் செய்யத் தகுந்தது |
| **यत्**<br>**யத்** | = | எக்காரணத்தால், |
| **कयाऽपि कलया**<br>**கயா(அ)பி கலயா** | = | ஒரு எள் அளவேனும், |
| **त्वयि**<br>**த்வயி** | = | உம்மிடம், |
| **मत्-शरीरम्**<br>**மத்-ஶரீரம்** | = | என்னுடைய தேகம், |
| **उपयोगम् न अगमत्**<br>**உபயோக$^3$ம் ந அக$^3$மத்** | = | உபயோகத்தை அடையவில்லையோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்தக் காரணத்தினால், |
| **मम मानुष्यकं तु धिक्**<br>**மம மானுஷ்யகம் து தி$^4$க்** | = | என்னுடைய மனுஷ்யத் தன்மையைப் பொசுக்கவே வேண்டும். |

ஏ பரமசிவ! நான் அடைந்த மனுஷ்ய ஜன்மத்தை விட பாம்பினுடைய ஜன்மமும், வ்ருஷபத்தினுடைய ஜன்மமும் மேலானது. பாம்போ உமக்கு அலங்கார

மாய் இருக்கிறது. வ்ருஷபமோ உமக்கு வாஹனமாய் இருக்கிறது. ஆகையால் இவ்விரண்டு ஜன்மங்களும் ஸ்தோத்ரம் செய்யத்தக்கன. என்னுடைய மனுஷ்ய சரீரமோ தங்களுக்கு எவ்விதமாகவும் உபயோகப்படவுமில்லை. ஆகையால் இந்த என் மனுஷ்ய ஜன்மத்தைப் பொசுக்க வேண்டும். சிறந்ததான மானிடஜன்மம் எடுத்துப் பக்திசெய்யாட்டாலும் வேறு எவ்வகையிலாவது என் உடல் சிவகைங்கர் யத்தில் ஈடுபட்டதா? இல்லை.

**शश्वद्भृशव्यसनितामपि मेऽवधार्य**
**धत्से कथं परमकारुणिकोऽप्यवज्ञाम् ।**
**किं नाथ पश्यसि न यत्परिहृत्य शङ्काम्**
**लग्नोऽनिशं शिव शिवेति मम प्रलापः ॥ २६ ॥**

**ஶஶ்வத்³ப்⁴ருஶவ்யஸனிதாமபி மே(அ)வதா⁴ர்ய**
**த⁴த்ஸே கத²ம் பரமகாருணிகோ(அ)ப்யவஜ்ஞாம் ।**
**கிம் நாத² பஶ்யஸி ந யத்பரிஹ்ருத்ய ஶங்காம்**
**லக்³னோ(அ)நிஶம் ஶிவ ஶிவேதி மம ப்ரலாப꞉ ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **शश्वत्**<br>**ஶஶ்வத்** | = | அடிக்கடி, |
| **भृश-व्यसनिताम्**<br>**ப்⁴ருஶ-வ்யஸனிதாம்** | = | அதிகமாக வருந்தி யிருக்கும் நிலையை, |
| **अवधार्य अपि**<br>**அவதா⁴ர்ய அபி** | = | அறிந்துகொண்டும், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீர், |
| **परम-कारुणिकः अपि**<br>**பரம-காருணிக꞉ அபி** | = | மிகவும் கருணையுள்ளவராய் இருந்த போதிலும், |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **अवज्ञा धत्से**<br>**அவஜ்ஞா த⁴த்ஸே** | = | அசட்டை செய்கிறீர்? |
| **हे नाथ**<br>**ஹே நாத²** | = | ஏ ஸ்வாமின்! |
| **शङ्काम्**<br>**ஶங்காம்** | = | சந்தேகத்தை (தயக்கத்தை), |

**परिहृत्य** = விட்டுவிட்டு,
**பரிஹ்ருத்ய**

**शिव शिव इति** = சிவ சிவ என்ற,
**ஶிவ ஶிவ இதி**

**मम** = என்னுடைய,
**மம**

**प्रलापः** = கதறலானது,
**ப்ரலாப:**

**अनिशं** = எப்பொழுதும்,
**அநிஶம்**

**लग्नः** = தொடர்ச்சியாய் இருக்கிறது,
**லக்³ன:**

**(इति) यत् (तत्)** = என்பதை,
**(இதி) யத் (தத்)**

**किं न पश्यसि** = நீர் பார்க்கவில்லையா
**கிம் ந பஶ்யஸி** (கவனிக்கவில்லையா)?

நான் அடிக்கடி அதிகமாக மனம் வருந்திக்கொண்டு இருக்கிறேன். நீங்கள் கருணையுள்ளவர் ஆயிற்றே, நான் வருந்துவதைத் தாங்கள் பார்த்துக் கொண்டிருந்தும் ஏன் என்னை அசட்டை செய்கிறீர்கள்? நான் தயக்கத்தை விட்டு 'சிவ' 'சிவ' என்று ப்ரலாபிக்கிறேன். இது தங்கள் காதில் விழவில்லையா? தாங்கள் ஏன் என்னைப் பார்க்காமல் இருக்கிறீர்கள்? ஏன் கவனிக்காமல் இருக்கிறீர்கள்?

**रक्तार्द्रचर्मवसनाय महाश्मशान**
**धाम्नेऽस्थिभूषणवते फणिकङ्कणाय ।**
**रक्षः पिशाचसचिवाय बलिं प्रयामः**
**रूपाय ते हर युगान्तनिशाचराय ॥ २७ ॥**

**ரக்தார்த்³ரசர்மவஸநாய மஹாஶ்மஶான**
**தா⁴ம்னே(அ)ஸ்தி²பூ⁴ஷணவதே ப²ணிகங்கணாய ।**
**ரக்ஷ: பிஶாசஸசிவாய ப³லிம் ப்ரயாம:**
**ரூபாய தே ஹர யுகா³ந்தநிஶாசராய ॥ 27 ॥**

**हे हर** = ஏ ஸம்ஹார மூர்த்தியே!
**ஹே ஹர**

**रक्त-आर्द्र-चर्म-वसनाय** = ரத்தத்தால் நனைந்த (யானையின்)
**ரக்த-ஆர்த்³ர-சர்ம-வஸநாய** தோலை வஸ்திரமாக உடையதும்,

**महा-श्मशान धाम्ने** = மஹா ச்மசானத்தை இடமாகவுடையதும்,

**மஹா-ஶ்மஶான தா4ம்னே**

**अस्थि-भूषणवते** = எலும்பை ஆபரணமாக உடையதும்,

**அஸ்தி2-பூ4ஷணவதே**

**फणि-कङ्कणाय** = பாம்பை வளையாக உடையதும்,

**ப2ணிகங்கணாய**

**रक्षः पिशाचसचिवाय** = ராக்ஷஸர்களோடும் பிசாசர்களோடும் கூடியிருப்பதும்,

**ரக்ஷः பிஶாசஸசிவாய**

**युगान्त-निशाचराय** = யுகத்தின் முடிவாகிய ப்ரளயகால ராத்திரியில் சஞ்சரிப்பதுமான,

**யுகா3ந்த-நிஶாசராய**

**ते रूपाय** = உம்முடைய உருவத்திற்கு,

**தே ரூபாய**

**बलिं प्रयामः** = நிவேதருமாக ஆகிரோம்.

**ப3லிம் ப்ரயாமः**

ஏ ஸம்ஹார மூர்த்தியே! தாங்கள் ரத்தம் தோய்ந்த யானையின் தோலை ஆடையாய் உடுத்து இருக்கிறீர்கள். மஹாச்மசானத்தை வாஸஸ்தானமாகக் காண்டு இருக்கிறீர்கள். பாம்பை வளையாக அணிந்து இருக்கிறீர்கள். ராக்ஷஸர்களோடும் பிசாசுகளுடனும் கூடியிருக்கிறீர்கள். யுகத்தின் முடிவாகிய ப்ரளயகாலத்தில் சஞ்சரிக்கிறீர். உம்முடைய உரு ருவத்திற்கு நிவேதனம் ஆகிரோம்.

**दिव्योत्तरीयभृति कौस्तुभरत्नभाजि**
**देवेऽपरे दधतु लुब्धधियोऽनुबन्धम् ।**
**रूपं दिगम्बर मखण्डनृमुण्डचूडम्**
**भावत्कमेव तु बतेश मम स्पृहायै ॥ २८ ॥**

**தி3வ்யோத்தரீயப்4ருதி கௌஸ்துப4ரத்னபா4ஜி**
**தே3வே(அ)பரே த3த4து லுப்3த4தி4யோ(அ)னுப3ந்த4ம் ।**
**ரூபம் தி3க3ம்ப3ர மக2ண்ட3ந்ருமுண்ட3சூட3ம்**
**பா4வத்கமேவ து ப3தேஶ மம ஸ்ப்ருஹாயை ॥ 28 ॥**

**दिव्य-उत्तरीय-भृति** = திவ்யமான உத்தரீயத்தை தரித்தவரும்,

**தி3வ்ய-உத்தரீய-ப்4ருதி**

**कौस्तुभ-रत्न-भाजि** = கௌஸ்துப ரத்னத்தை மார்பில் அலங்காரமாக அடைந்தவருமான,

**கௌஸ்துப4-ரத்ன-பா4ஜி**

**अपरे देवे** = மற்றொரு தெய்வமான விஷ்ணுவிடத்தில்,

**அபரே தே3வே**

| | | |
|---|---|---|
| **लुब्ध-धियः**<br>**லுப்³த⁴-தி⁴ய:** | = | பேராசை கொண்டவர்கள், |
| **अनुबन्धम्**<br>**அனுப³ந்த⁴ம்** | = | தொடர்பை, |
| **दधतु**<br>**த³த⁴து** | = | வைத்துக் கொள்ளட்டும்; |
| **तु**<br>**து** | = | ஆனால், |
| **हे ईश**<br>**ஹே ஈஶ** | = | ஏ பரமேச்வர! |
| **दिगम्बरम्**<br>**தி³க³ம்ப³ரம்** | = | திக்கையே வஸ்திரமாக உடையதும், |
| **अखण्ड-नृमुण्ड-चूडम्**<br>**அக²ண்ட³-ந்ருமுண்ட³-சூட³ம்** | = | மனிதனின் முழு மண்டை யோட்டை தலையில் ஆபரணமாக உடையதுமான, |
| **भावत्कम्**<br>**பா⁴வத்கம்** | = | உம்முடைய, |
| **रूपं एव**<br>**ரூபம் ஏவ** | = | ரூபமே, |
| **मम स्पृहायै**<br>**மம ஸ்ப்ருஹாயை** | = | என் விருப்பத்திற் குரியதாகிறது. |

திவ்ய பீதாம்பரம் தரித்துக் கௌஸ்துபரத்னத்தை மார்பில் அணிந்த விஷ்ணு விடம் ப்ரீதி வைக்கிறவர்கள் ப்ரீதி வைக்கட்டும். திக்கையே தனக்கு ஆடையாகவும், மண்டை யோட்டையே ஆபரணமாகவும் உடைய பரம சிவனாகிய உம்மிடத்திலேயே என் மனம் செல்லுகிறது.

**जीवामि चेद्ध पृथुप्रियविप्रयोग-**
**रोगादयो नरकदुःखभियोऽन्यथाऽपि ।**
**घ्नन्त्येव मामुभयथाऽप्यसुखोऽहमित्थम्**
**अत्रोचितं हर चर स्वकृपालुतायाः॥ २९ ॥**

**ஜீவாமி சேத்³த⁴ ப்ருது²ப்ரியவிப்ரயோக³-**
**ரோகா³த³யோ நரகது³:க²பி⁴யோ(அ)ன்யதா²(அ)பி ।**
**க்⁴னந்த்யேவ மாமுப⁴யதா²(அ)ப்யஸுகோ²(அ)ஹமித்த²ம்**
**அத்ரோசிதம் ஹர சர ஸ்வக்ருபாலுதாயா:॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **जीवामि चेत्**<br>**ஜீவாமி சேத்** | = | உயிரோடு இருப்பேனாகில், |

| | | |
|---|---|---|
| पृथु-प्रियविप्रयोग-रोगादयः | = | மிகவும் ப்ரியமுள்ளவருடைய |
| ப்ருது²-ப்ரியவிப்ரயோக³-ரோகா³த³யঃ | | பிரிவும் வியாதி முதலியவையும், |
| घ्नन्ति एव | = | துன்பப்படுத்திக் கொண்டே இருக்கும், |
| க்⁴னந்தி ஏவ | | |
| अथ | = | அல்லது, |
| அத² | | |
| अन्यथा अपि | = | இறந்து போவோம் என்றலும், |
| அன்யதா² அபி | | |
| नरक-दुःख भियः | = | நரகத்தில் அனுபவிக்கப்படவேண்டிய |
| நரக-து³:க² பி⁴யঃ | | துக்கங்களின் பயம், |
| मां | = | என்ஐன, |
| மாம் | | |
| घ्नन्ति एव | = | நிச்சயமாய்த் துன்பப்படுத்துகின்றது, |
| க்⁴னந்தி ஏவ | | |
| इत्थं | = | இவ்வாறுக, |
| இத்த²ம் | | |
| उभयथा अपि | = | இரண்டு வகையிலும், |
| உப⁴யதா² அபி | | |
| अहम् असुरवः | = | நான் ஸுகம் இல்லாதவனுய் |
| அஹம் அஸுரவঃ | | இருக்கிறேன். |
| अत्र | = | இந்த விஷயத்தில், |
| அத்ர | | |
| हे हर | = | ஏ பரமசிவ! |
| ஹே ஹர | | |
| स्वकृपालुतायाः | = | தயவு உள்ளவராய் இருக்கும் |
| ஸ்வக்ருபாலுதாயாঃ | | தங்கள் தன்மைக்கு, |
| उचितं | = | உசிதமாக உள்ளதை, |
| உசிதம் | | |
| चर | = | செய்யுங்கள். |
| சர | | |

உயிரோடு இருப்போம் என்றல் பிரியமுள்ளவர்கள் பிரிவு, வியாதி, முதலிய துன்பங்கள் துன்பப் படுத்துகின்றன. இல்ஐல, இறந்து போவோம் என்றல் நரகத்தில் அனுபவிக்க வேண்டிய துக்கங்களின் பயமும் விடுவதில்ஐல. இப்படி இரண்டு வகையிலும் என்ஐனத் துன்பங்கள் சூழ்ந்து கொண்டு துன்புறுத்துகின்றன. ஏ பரமசிவ! இப்படித் துன்பப்படும் என் விஷயத்தில் உம் கருஐணயுள்ள தன்மைக்கு எது தகுதி யாகத் தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள்.

**यत्रेन्द्रियाणि विरमन्ति निजक्रियाभ्य:**
**यात्यान्तरोऽपि करणप्रसरोऽवसादम् ।**
**प्राणास्त्रुटन्ति च समस्त निराश भूतम्**
**मामेत्य शंकर कुतोऽपि तदा दयेथा: ॥ ३० ॥**

**யத்ரேந்த்$^{3}$ரியாணி விரமந்தி நிஜக்ரியாப்$^{4}$ய:**
**யாத்யாந்தரோ(அ)பி கரணப்ரஸரோ(அ)வஸாத$^{3}$ம் ।**
**ப்ராணாஸ்த்ருடந்தி ச ஸமஸ்த நிராஶ பூ$^{4}$தம்**
**மாமேத்ய ஶங்கர குதோ(அ)பி ததா$^{3}$ த$^{3}$யேதா$^{2}$: ॥ 30 ॥**

| | | |
|---|---|---|
| **यत्र** <br> **யத்ர** | = | எந்தக் கடைசி காலத்தில், |
| **निजक्रियाभ्य:** <br> **நிஜக்ரியாப்$^{4}$ய:** | = | தங்களுடைய தொழில்களில் இருந்து, |
| **इन्द्रियाणि** <br> **இந்த்$^{3}$ரியாணி** | = | இந்திரியங்கள், |
| **विरमन्ति** <br> **விரமந்தி** | = | ஓய்வடைகின்றனவோ, |
| **आन्तर: करण प्रसर: अपि** <br> **ஆந்தர: கரண ப்ரஸர: அபி** | = | அந்த: கரணத்தின் செய்கையும், |
| **अवसादं याति** <br> **அவஸாத$^{3}$ம் யாதி** | = | ஓய்வு அடைகின்றதோ, |
| **प्राणा: च त्रुटन्ति** <br> **ப்ராணா: ச த்ருடந்தி** | = | ப்ராணன்களும் துண்டித்துப்போகின்றனவோ, |
| **तदा** <br> **ததா$^{3}$** | = | அப்பொழுது, |
| **समस्त-निराश-भूतम् मां** <br> **ஸமஸ்த-நிராஶ-பூ$^{4}$தம் மாம்** | = | எல்லாவற்றிலும் ஆசை (நம்பிக்கை) அற்றுப்போன என்னை, |
| **हे शंकर** <br> **ஹே ஶங்கர** | = | ஏ பரமசிவ! |
| **कुत: अपि** <br> **குத: அபி** | = | எங்கிருந்தோ, |
| **एत्य** <br> **ஏத்ய** | = | வந்து, |
| **दयेथा:** <br> **த$^{3}$யேதா$^{2}$:** | = | தயவு செய்ய வேண்டும். |

என் கடைசிக் காலத்தில் (நான் மரணம் அடையும் காலத்தில்) என் இந்திரியங்கள் அவைகள் செய்யும் தொழில்களைச் செய்யாமல் ஓய்வடைகின்றன. அந்த:-கரணத்தின் சக்தியும் அடங்குகிறது. இந்தத் தசையில் எத்துணையிலும் நம்பிக்கை அற்றவனாக இருக்கிறேன். ஏ, பரமசிவ! இத்தசையில் இருக்கும் என்னைக் காப்பாற்ற எங்கிருந்தாவது வந்து எனக்குக் கிருபை செய்யும்.

**स्वाशेषपूर्वदुरितस्मरणादुदेति**
**यत्रासमं भयमसुप्रशमप्रसङ्गे ।**
**कः कान्दिशीकमनसः शरणं तदा मे**
**स्वामिंस्तवैव समयः स कृपालुतायाः ॥ ३१ ॥**

**ஸ்வாஶேஷபூர்வது³ரிதஸ்மரணாது³தே³தி**
**யத்ராஸமம் ப⁴யமஸுப்ரஶமப்ரஸங்கே³ ।**
**க: காந்தி³ஶீகமனஸ: ஶரணம் ததா³ மே**
**ஸ்வாமிம்ஸ்தவைவ ஸமய: ஸ க்ருபாலுதாயா: ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **यत्र**<br>**யத்ர** | = | எந்த, |
| **असु-प्रशम-प्रसङ्गे**<br>**அஸு-ப்ரஶம-ப்ரஸங்கே³** | = | என்னுடைய ப்ராணன் அடங்கும் ஸமயத்தில், |
| **स्व-अशेष-पूर्व-दुरित-स्मरणात्**<br>**ஸ்வ-அஶேஷ-பூர்வ-து³ரித-ஸ்மரணாத்** | = | என்னால் முன் செய்யப்பட்ட எல்லாக் கெடுதல்களின் நினைவால், |
| **असमम्**<br>**அஸமம்** | = | ஒப்பில்லாத, |
| **भयम् उदेति**<br>**ப⁴யம் உதே³தி** | = | பயம் உண்டாகிறதோ, |
| **तदा**<br>**ததா³** | = | அப்பொழுது, |
| **कान्दिशीकमनसः**<br>**காந்தி³ஶீகமனஸ:** | = | திக்ப்ரமை கொண்ட (பயந்த) மனத்தை உடைய, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **कः शरणं**<br>**க: ஶரணம்** | = | யார் ரக்ஷகர்? |
| **हे स्वामिन्**<br>**ஹே ஸ்வாமின்** | = | ஏ நாத! |

| | | |
|---|---|---|
| **तव** | = | உம்முடைய, |
| **தவ** | | |
| **कृपालुतायाः एव** | = | கிருபை உடையவராய் இருக்கும் |
| **க்ருபாலுதாயாः ஏவ** | | தன்மைக்கே, |
| **सः समयः** | = | அது தக்க ஸமயம். |
| **ஸः ஸமயः** | | |

என் பிராணன் ஒடுங்கும் தறுவாயில் நான் முன் செய்த பாப கர்மங்கள் என் ஞாபகத்திற்கு வருகின்றன. அதனுல் ஒப்பிட முடியாத பயத்தை அடைகிறேன். அதனுல் திக்கற்றவன்போல் திகைக்கின்றேன். அந்த ஸமயம் நான் யாரைச் சரண மாக அடைவேன்? இப்படி நான் உழலும் ஸமயத்தில்தான் நீர் என்னை ஆட்கொள்ள வேண்டும். அந்த ஸமயத்தில் தான் தாங்கள் கிருபா ஸமுத்ரம் என்பதைக் காட்ட வேண்டும்.

**अध्यैव यामि शरणं परमेश्वर त्वां**
**शक्ष्यामि किं ननु तदाऽऽहतसर्वशक्तिः ।**
**मृत्युर्यदा मम भयाय पतत्यकस्माद्**
**अन्धस्य वक्त्र इव हस्ततलप्रहारः ॥ ३२ ॥**

**அத்⁴யைவ யாமி ஶரணம் பரமேஶ்வர த்வாம்**
**ஶக்ஷ்யாமி கிம் நனு ததா³(ஆ)ஹதஸர்வஶக்தி꞉ ।**
**ம்ருத்யுர்யதா³ மம ப⁴யாய பதத்யகஸ்மாத்³**
**அந்த⁴ஸ்ய வக்த்ர இவ ஹஸ்ததலப்ரஹார꞉ ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **यदा** | = | எந்த ஸமயத்தில், |
| **யதா³** | | |
| **अन्धस्य** | = | குருடனுடைய, |
| **அந்த⁴ஸ்ய** | | |
| **वक्त्रे** | = | முகத்தில், |
| **வக்த்ரே** | | |
| **हस्त - तल प्रहारः इच** | = | கையால் (திடீரென்று) கொடுக்கப்பட்ட |
| **ஹஸ்த - தல ப்ரஹார꞉ இச** | | அடியைப் போல், |
| **मृत्युः** | = | யமன், |
| **ம்ருத்யு꞉** | | |
| **अकस्मात्** | = | திடீரென்று, |
| **அகஸ்மாத்** | | |
| **मम** | = | எனக்கு, |
| **மம** | | |

**भयाय पतति** = பயத்தை உண்டு பண்ண வருகிறனே,

**ப⁴யாய பததி**

**तदा** = அந்த ஸமயத்தில்,

**ததா³**

**ननु** = நிச்சயமாய்,

**நனு**

**आहत-सर्व-शक्तिः** = சர்வ சக்திகளும் ஒடுங்கியவனுய்,

**ஆஹத-ஸர்வ-ஶக்திஃ**

**किं शक्ष्यामि** = நான் என்ன செய்ய முடியும்?

**கிம் ஶக்ஷ்யாமி** ஆகையால்,

**हे परमेश्वर** = ஏ பரமசிவ!

**ஹே பரமேஶ்வர**

**त्वां** = உம்மை,

**த்வாம்**

**अध्यैव** = இப்பொழுதே,

**அத்⁴யைவ**

**शरणं यामि** = சரணம் அடைகிறேன்.

**ஶரணம் யாமி**

யமன் திடீரென்று சொல்லாமலே வந்துவிடுவான். கண்ணில்லாதவனைத் திடீரென்று முகத்தில் அடித்தால் எப்படிப் ப்ரமித்து நிற்பானே, அம்மாதிரி யமன் என்னிடம் வரும் காலத்தில் எனக்கு ஸர்வ சக்திகளும் அடங்கிக் கிடக்கும். அந்தக் காலத்தில் ம்ருத்யுவைத் தடுக்கும் சக்தியும் சரணகதி செய்யும் சக்தியும் இரண்டும் எனக்கு இல்லாமல் போகும். ஆகையால் தங்களை இன்றே சரணம் அடைகிறேன்.

**आर्तिक्षणे सपदि विस्मर तात मातः**
**इत्यादिकं च विफलं कृपणप्रलापम् ।**
**शर्वेश शंकर शिवेति नुतिं भजस्व**
**जिह्वे यतो विघटतेऽखिलदुःखभारः ॥ ३३ ॥**

**ஆர்திக்ஷணே ஸபதி³ விஸ்மர தாத மாதஃ**
**இத்யாதி³கம் ச விப²லம் க்ருபணப்ரலாபம் ।**
**ஶர்வேஶ ஶங்கர ஶிவேதி நுதிம் ப⁴ஜஸ்வ**
**ஜிஹ்வே யதோ விக⁴டதே(அ)கி²லது³ஃக²பா⁴ரஃ ॥ 33 ॥**

**हे जिह्वे** = ஏ நாக்கே!

**ஹே ஜிஹ்வே**

**आर्तिक्षणे** = மரண வேதனையின் போது,

**ஆர்திக்ஷணே**

**तात मातः इत्यादिकं** = அப்பா, அம்மா முதலிய,

**தாத மாதஃ இத்யாதி[3]கம்**

**विफलं** = ப்ரயோஜனமற்ற,

**விப[2]லம்**

**कृपण-प्रलापम्** = தீன அழுகையை,

**க்ருபண-ப்ரலாபம்**

**सपदि** = உடனே,

**ஸபதி[3]**

**विस्मर** = மறந்துவிடு,

**விஸ்மர**

**यतः** = எந்தச் சிவ நாமாவின் உச்சரிப்பினுல்,

**யதஃ**

**अखिल-दुःख-भारः** = எல்லாத் துக்க பாரமும்,

**அகி[2]ல-து[3]ஃக[2]-பா[4]ரஃ**

**विघटते** = சிதறி விடுகின்றதோ (அப்படிப்பட்ட),

**விக[4]டதே**

**हे शर्व, ईश, शंकर, शिव इति** = ஏ சர்வ! ஏ ஈச! ஏ சங்கர! ஏ.சிவ! என்ற,

**ஹே ஶர்வ, ஈஶ, ஶங்கர, ஶிவ இதி**

**नुतिं** = ஸ்தோத்ரத்தை,

**நுதிம்**

**भजस्व** = செய்.

**ப[4]ஜஸ்வ**

ஏ நாக்கே! மரண வேதனை அடையும் காலத்தில் எல்லோரைப்போல் அப்பா அம்மா ஐயோ என்னும் பயனற்ற சொற்களை அறவே மறந்துவிடு. ஏ சர்வ! ஏ ஈச! ஏ சங்கர! ஏ சிவ! என்னும் ஈச்வர நாமாக்களைச்சொல்லு. இந்த ஈச்வர நாமாக்களால் அன்றோ சகல துன்பங்களும் சிதறி விடுகின்றன.

இம்மாதிரியே தேவாரத் திருவாசகங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. நாக்கைப் போல் தேகங்களின் மற்ற இந்திரியங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

**स्वास्थ्ये मदात्कति न दुश्चरितानि नाम**
**नाथ व्यधां गतविवेकतया विशङ्कः ।**
**संस्मृत्य मृत्युभयमद्य तु विह्वलोऽस्मि**
**श्रीकण्ठ भोक्तुमपि येन न पारयामि ॥ ३४ ॥**

**ஸ்வாஸ்த்[2]யே மதா[3]த்கதி ந து[3]ஶ்சரிதானி நாம**
**நாத[2] வ்யதா[4]ம் க[3]தவிவேகதயா விஶங்க: ।**
**ஸம்ஸ்ம்ருத்ய ம்ருத்யுப[4]யமத்[3]ய து விஹ்வலோ(அ)ஸ்மி**
**ஶ்ரீகண்ட[2] போ[4]க்துமபி யேன ந பாரயாமி ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **हे नाथ**<br>**ஹே நாத[2]** | = | ஏ ஸ்வாமி! |
| **स्वास्थ्ये**<br>**ஸ்வாஸ்த்[2]யே** | = | நன்றாய் ஸ்வஸ்தமாக இருந்த காலத்தில், |
| **मदात्**<br>**மதா[3]த்** | = | மதத்தினால், |
| **विशङ्कः**<br>**விஶங்க:** | = | பயமில்லாமல், |
| **गत-विवेकतया**<br>**க[3]த-விவேகதயா** | = | விவேகம் இழந்த காரணத்தினால், |
| **कति दुश्चरितानि नाम**<br>**கதி து[3]ஶ்சரிதானி நாம** | = | எந்தக் கெட்ட கார்யங்களைத் தாம், |
| **न व्यधां**<br>**ந வ்யதா[4]ம்** | = | (நான்) செய்யவில்லை, |
| **हे श्रीकण्ठ**<br>**ஹே ஶ்ரீகண்ட[2]** | = | ஏ ச்ரீகண்ட! |
| **मृत्यु भयं**<br>**ம்ருத்யு ப[4]யம்** | = | யமனுடைய பயத்தை, |
| **संस्मृत्य**<br>**ஸம்ஸ்ம்ருத்ய** | = | நினைத்து, |
| **अद्य तु**<br>**அத்[3]ய து** | = | இப்பொழுதோ, |
| **विह्वलः अस्मि**<br>**விஹ்வல: அஸ்மி** | = | நடுங்கினவனாய் இருக்கிறேன், |
| **येन**<br>**யேன** | = | எந்த மிருத்யு பயத்தினால், |

| | | |
|---|---|---|
| **भोक्तुम् अपि**<br>**போ⁴க்தும் அபி** | = | உண்பதற்குக்கூட, |
| **न पारयामि**<br>**ந பாரயாமி** | = | தகுதியற்றவனுய் இருக்கிறேன். |

ஸ்வஸ்தமாய் இருந்தகாலத்தில் விவேகத்தை இழந்து மதத்திஞல், பயமில்லாமல், நான் எந்த எந்தக் கெட்ட கார்யங்களைத்தாம் செய்யவில்லை. அந்தக் கெட்ட காரியங்களின் பலனைக் கொடுப்பதற்கு ஸித்தமாய் உள்ள யமனை நினைத்து இப்பொழுது நடுங்குகின்றேன். இந்தக் காரணத்திஞல் சாப்பிடுவதற்குக்கூடத் தகுதியற்றவனுய் இருக்கிறேன்.

**पूर्वं न चेद्विरचिता तव देव सेवा**
**तेनैव नैव दयसे श्रयतो ममार्तिम् ।**
**किं प्रागसंस्तुत इति प्रतिपन्नमूल**
**च्छायं गतश्रमरुजं न तरुः करोति ॥ ३५ ॥**

**பூர்வம் ந சேத்³விரசிதா தவ தே³வ ஸேவா**
**தேனைவ நைவ த³யஸே ஶ்ரயதோ மமார்திம் ।**
**கிம் ப்ராக³ஸம்ஸ்துத இதி ப்ரதிபன்னமூல**
**ச்சா²யம் க³தஶ்ரமருஜம் ந தருः கரோதி ॥ 35 ॥**

| | | |
|---|---|---|
| **हे देव**<br>**ஹே தே³வ** | = | ஏ ஸ்வாமின்! |
| **पूर्वं**<br>**பூர்வம்** | = | முன்பு, |
| **तव सेवा**<br>**தவ ஸேவா** | = | உம் ஸேவை, |
| **न विरचिता चेत्**<br>**ந விரசிதா சேத்** | = | பண்ணப்படவில்லையேல், |
| **तेनैव**<br>**தேனைவ** | = | அந்தக் காரணத்திஞலேயே, |
| **आर्तिम् श्रयतः**<br>**ஆர்திம் ஶ்ரயதः** | = | (மரண) வேதனையை அடைந்துகொண்டிருக்கும், |
| **मम**<br>**மம** | = | எனக்கு, |
| **नैव दयसे**<br>**நைவ த³யஸே** | = | நீர் தயவு செய்யவில்லையா? |

| | | |
|---|---|---|
| **तरुः**<br>**தரு:** | = | விருக்ஷமானது, |
| **प्रतिपन्नमूल च्छायं**<br>**ப்ரதிபன்னமூல ச்சா²யம்** | = | தனது அடிநிழலை அடைந்தவனை, |
| **प्रागसंस्तुत इति**<br>**ப்ராக³ஸம்ஸ்துத இதி** | = | முன்பு பழக்கமில்லாதவன் என்று, |
| **गत-श्रम-रुजं**<br>**க³த-ஶ்ரம-ருஜம்** | = | களைப்பின் பீடையகன்றவனாக, |
| **किं न करोति**<br>**கிம் ந கரோதி** | = | செய்கிறதில்லையா? |

நான் தங்களை இந்தக் ஸேவிக்கவில்லை. இந்தக் காரணத்தை முன்னிட்டு இப்பொழுது மரண வேதனையை அடைந்த என் மீது தயவு செய்யாமல் இருந்து விடுவீர்களா? விருக்ஷமானது நிழலைத் தந்து தன்னிடம் வந்தவர்கள் சிரமத்தைப் போக்குகிறது. தன்னிழலை அடைந்தவனை "நீ முன்பு என்னிடம் பழகாதவன், உனக்கு நிழலைக் கொடுக்கமாட்டேன்" என்று சொல்லுகிறதா? சொல்லுகிறதில்லை. அம்மாதிரி தங்களை முன்புஸ்தோத்ரம் செய்யவில்லை என்ற காரணத்தினால் இப்பொழுது சரணம் அடைந்த என்னைக் கைவிடமாட்டீர்கள் என்பது நிச்சயம்.

கடவுளுக்குக் கருணை புரிவது ஸ்வாபாவிகமான குணம் என்று கவி இந்தச் சுலோகத்தால் விளக்குகிறார்.

**ज्ञानप्रकाशसुलभं शिव दर्शनं ते**
**जात्यन्धतैव च परं मम तद्वियोगात् ।**
**तत्तां त्वमेव किल कामपि देहि युक्तिम्**
**व्यक्तिं ययैष्यसि मम श्रममन्तरेण ॥ ३६ ॥**

**ஜ்ஞானப்ரகாஶஸுலப⁴ம் ஶிவ த³ர்ஶனம் தே**
**ஜாத்யந்த⁴தைவ ச பரம் மம தத்³வியோகா³த் ।**
**தத்தாம் த்வமேவ கில காமபி தே³ஹி யுக்திம்**
**வ்யக்திம் யயைஷ்யஸி மம ஶ்ரமமந்தரேண ॥ 36 ॥**

| | | |
|---|---|---|
| **हे शिव**<br>**ஹே ஶிவ** | = | ஏ பரமசிவ! |
| **ते दर्शनं**<br>**தே த³ர்ஶனம்** | = | உம்முடைய தர்சனம், |
| **ज्ञान-प्रकाश-सुलभं**<br>**ஜ்ஞானப்ரகாஶஸுலப⁴ம்** | = | ஞான வெளிச்சத்தால் பார்ப்பதற்கு ஸுலபமானது (எளிதானது); |

| | | |
|---|---|---|
| **मम परं** | = | எனக்கோ என்றால், |
| **மம பரம்** | | |
| **तद्-वियोगात्** | = | அந்த ஞான ஒளி இல்லாததால், |
| **தத்³-வியோகா³த்** | | |
| **जात्यन्धतैव** | = | பிறவிக் குருட்டுத்தன்மையே |
| **ஜாத்யந்த⁴தைவ** | | ஏற்பட்டிருக்கிறது. |
| **तत्** | = | ஆகையால், |
| **தத்** | | |
| **यया** | = | எதனால், |
| **யயா** | | |
| **मम** | = | எனக்கு, |
| **மம** | | |
| **श्रमम् अन्तरेण** | = | சிரமம் இல்லாமல், |
| **ஶ்ரமம் அந்தரேண** | | |
| **व्यक्तिं एष्यसि** | = | ப்ரஸன்னராக ஆவீரோ, |
| **வ்யக்திம் ஏஷ்யஸி** | | |
| **तां कामपि युक्तिं** | = | அந்த ஏதோ ஒரு உபாயத்தை, |
| **தாம் காமபி யுக்திம்** | | |
| **त्वमेव** | = | நீங்களே, |
| **த்வமேவ** | | |
| **देहि** | = | கொடுங்கள். |
| **தே³ஹி** | | |

ஏ பரமசிவ! தங்களை அடைவதற்கு ஞான மார்க்கமே ஸுலபமான மார்க்கம். ஞானக்கண் உடையவர்களே தங்களைத் தர்சனம் செய்யமுடியும். எனக்கு ஞானக் கண் என்பது இல்லை. பிறவிக் குருடனாய் இருக்கிறேன். ஆனால் எப்படியாவது நான் சிரமம் இல்லாமல் தங்களை தர்சனம் செய்தாக வேண்டும். இதற்கு வேண்டிய யுக்தி யைத் தாங்களே செய்யவேண்டும்.

மேலே 17, 29 - வது சுலோகங்களில் சொன்னது போல் இங்கும், கவி பாரம் முழுவதையும் ஈச்வரன் பேரிலேயே போடுகிறார்.

**प्राप्येदृशीमपि मनुष्यदशां न पुण्ये**
**ज्ञानेऽथवा विधिहतोऽप्यगमं प्रतिष्ठाम् ।**
**सामग्र्यसावथ कुतः पुनरप्यतो मां**
**स्वामिन्नधन्यमनुकम्पितुमर्हसि त्वम् ॥ ३७ ॥**

ப்ராப்யேத்³ருஶீமபி மனுஷ்யத³ஶாம் ந புண்யே
ஜ்ஞானே(அ)த²வா விதி⁴ஹதோ(அ)ப்யக³மம் ப்ரதிஷ்டா²ம் ।
ஸாமக்³ர்யஸாவத² குத꞉ புனரப்யதோ மாம்
ஸ்வாமின்னத⁴ன்யமனுகம்பிதுமர்ஹஸி த்வம் ॥ 37 ॥

| | | |
|---|---|---|
| ईदृशीम्<br>ஈத்³ருஶீம் | = | இப்படிப்பட்ட, |
| मनुष्यदशां<br>மனுஷ்யத³ஶாம் | = | மனுஷ்ய தசையை, |
| प्राप्य अपि<br>ப்ராப்ய அபி | = | அடைந்தும்கூட, |
| विधिहत:<br>விதி⁴ஹத꞉ | = | தலை விதியால் கெட்டவனாய், |
| पुण्ये<br>புண்யே | = | புண்ணியமான கர்ம மார்க்கத்தில், |
| अथवा ज्ञाने अपि<br>அத²வா ஜ்ஞானே அபி | = | அல்லது ஞான மார்க்கத்திலாவது, |
| प्रतिष्ठाम्<br>ப்ரதிஷ்டா²ம் | = | நிலைத்து நிற்றலை, |
| न अगमम्<br>ந அக³மம் | = | நான் அடையவில்லை, |
| पुनरपि<br>புனரபி | = | மறுபடியும், |
| असौ सामग्री<br>அஸௌ ஸாமக்³ரீ | = | இப்படிப்பட்ட உபாயச்சேர்க்கை, |
| कुत:<br>குத꞉ | = | எங்கிருந்து உண்டாகும் (புண்ணியம் செய்யக்கூடிய இந்த தேகம் மறுபடியும் எங்கிருந்து கிடைக்கும்)? |
| अत:<br>அத꞉ | = | ஆகையால், |
| हे स्वामिन्<br>ஹே ஸ்வாமின் | = | ஏ நாத! |
| त्वं<br>த்வம் | = | நீர், |
| अधन्यं मां<br>அத⁴ன்யம் மாம் | = | அபாக்யசாலியாகிய என் பேரில், |

**अनुकम्पितुम् अर्हसि** = தயவு செய்யக் கடவீர்.
**அனுகம்பிதும் அர்ஹஸி**

கிடைத்தற்கு மிகவும் துர்லபமான மனுஷ்ய தேகத்தை அடைந்தேன். மனித னுய்ப் பிறந்தவர் தங்களை அடையக்கர்ம யோகத்தையாவது ஞானயோகத்தை யாவது அனுஷ்டிப்பார்கள். நான் இவ்விரண்டில் எதையும் அனுஷ்டிக்காமல் கெட்டு விட்டேனே. மறுபடியும் இவ்வளவு ஸௌகர்யங்களோடு கூடிய மனுஷ்ய தேகம் எப்பொழுது கிடைக்கும்? ஏ ஸ்வாமின்! அபாக்யசாலியாகிய என் பேரில் தாங்கள் கிருபை செய்யவேண்டும்.

**लीनेन भूरि विषयाध्वनि सौख्यलोभात**
**नामापि मोहितधिया कलितं न मृत्योः ।**
**आसीदतः सपदि तद्भयतो मया किं**
**शक्यं विधातुमहहा महदाकुलोऽस्मि ॥ ३८ ॥**

**லீனேன பூ⁴ரி விஷயாத்⁴வனி ஸௌக்²யலோபா⁴த**
**நாமாபி மோஹிததி⁴யா கலிதம் ந ம்ருத்யோః ।**
**ஆஸீத³தః ஸபதி³ தத்³ப⁴யதோ மயா கிம்**
**ஶக்யம் விதா⁴துமஹஹா மஹதா³குலோ(அ)ஸ்மி ॥ 38 ॥**

**सौख्य लोभात्** = இன்பத்தை அனுபவிக்க வேண்டும்
**ஸௌக்²ய லோபா⁴த்** என்ற பேராசையால்,
**विषयाध्वनि** = சிற்றின்பங்கள் என்ற மார்க்கத்தில்,
**விஷயாத்⁴வனி**
**भूरि** = மிகவும்,
**பூ⁴ரி**
**लीनेन** = ஈடுபட்டவனுயும்,
**லீனேன**
**मोहित-धिया** = மோகம் அடைந்த புத்தியை
**மோஹிததி⁴யா** உள்ளவனுமான (என்னுல்),
**मृत्योः** = யமனுடைய,
**ம்ருத்யோః**
**नामा अपि** = பெயர் கூட,
**நாமா அபி**
**न कलितं** = எண்ணப்படவில்லை,
**ந கலிதம்**
**सपदि** = திடீரென்று,
**ஸபதி³**

| | | |
|---|---|---|
| **आसोदत:**<br>**ஆஸோத³த:** | = | கிட்ட நெருங்குகிற, |
| **तद्-भयत:**<br>**தத்³-ப⁴யத:** | = | அந்த ம்ருத்யுவின் பயத்தினின்று<br>(அந்த ம்ருத்யு பயத்தைப் போக்க), |
| **मया**<br>**மயா** | = | என்னால், |
| **किं**<br>**கிம்** | = | என்ன, |
| **विधातुं शक्यं**<br>**விதா⁴தும் ஶக்யம்** | = | செய்யமுடியும்? |
| **अहहा**<br>**அஹஹா** | = | அந்தோ! |
| **महत् आकुल: आस्मि**<br>**மஹத் ஆகுல: ஆஸ்மி** | = | மிகவும் மனங் கலங்கினவனாய்<br>இருக்கிறேன். |

இன்பத்தில் பேராசை கொண்டு சிற்றின்ப ஸௌக்கியங்களில் மிகவும் முழுகி விட்டேன். இப்படி இருக்கும் பொழுது, 'யமன்' என்பவன் ஒருவன் இருக்கின்றான் என்று எண்ணவேயில்லை. ஆனால் அந்த யமன் சீக்கிரமாக ஸமீபம் வருகிறான். அவனிடம் இருந்து எனக்கு உண்டாகும் பயத்தைப் போக்க என்னால் என்ன செய்ய முடியும். அந்தோ! மிகவும் மனங்கலங்கினவனாய் இருக்கிறேன்.

**या विक्रिया यमभटभ्रुकुटिच्छटानां**
**पीडाश्च या नवनवा नरकावनीषु ।**
**ता निर्विशन् भव कथं भवितास्म्यमुत्र**
**कुत्र व्रजामि शरणं कतरं प्रपद्ये ॥ ३९ ॥**

**யா விக்ரியா யமப⁴டப்⁴ருகுடிச்ச²டானாம்**
**பீடா³ஶ்ச யா நவனவா நரகாவனீஷு ।**
**தா நிர்விஶன் ப⁴வ கத²ம் ப⁴விதாஸ்ம்யமுத்ர**
**குத்ர வ்ரஜாமி ஶரணம் கதரம் ப்ரபத்³யே ॥ 39 ॥**

| | | |
|---|---|---|
| **हे भव**<br>**ஹே ப⁴வ** | = | ஏ பரமசிவ! |
| **यम-भट-भ्रुकुटि-च्छटानां**<br>**யம-ப⁴ட-ப்⁴ருகுடி-ச்ச²டானாம்** | = | யம கிங்கரர்களின் புருவ<br>நெரிப்பு வரிசைகளின், |
| **या: विक्रिया:**<br>**யா: விக்ரியா:** | = | எந்த விகாரங்கள் உண்டோ, |

| | | |
|---|---|---|
| **नरकावनीषु**<br>**நரகாவனீஷு** | = | நரக பூமிகளில், |
| **या नवनवाः पीडाः**<br>**யா நவனவாः பீடா³ः** | = | புதிது புதிதான கஷ்டங்கள்<br>எவைகள் உண்டோ, |
| **ताः**<br>**தா:** | = | அவைகளை, |
| **अमुत्र**<br>**அமுத்ர** | = | அங்கே, |
| **निर्विशन्**<br>**நிர்விஶன்** | = | அனுபவித்துக்கொண்டு, |
| **कथं भवितास्मि**<br>**கத²ம் ப⁴விதாஸ்மி** | = | எப்படி இருக்கப் போகிறேன்? |
| **कुत्र व्रजामि**<br>**குத்ர வ்ரஜாமி** | = | எங்குப் போவேன்? |
| **कतरं**<br>**கதரம்** | = | யாரை |
| **शरणं प्रपद्ये**<br>**ஶரணம் ப்ரபத்³யே** | = | சரணம் அடைவேன்? |

நான் செய்த கெட்ட கார்யங்களின் பலன்களை நரகங்களில் அனுபவிக்க வேண்டும். அங்கு யம படர்களின் புருவ நெரிப்புகளைப்பற்றி என்ன சொல்லுவது? அங்கு அனுபவிக்க வேண்டிய புதிது புதிதான கஷ்டங்களைப் பற்றித்தான் என்ன சொல்லுவது? இவைகளை அங்கே எப்படி அனுபவித்துக் கொண்டிருப்பேன்? எனக்குப் புகலிடம் ஒன்றும் இல்லையே; யாரைத்தான் நான் சரணம் அடைவேன்?

**स्मृत्वाऽप्यहो रविज किंकृतहुंकृतीनां**
**मुह्यामि यामि विलयं भयविह्वलात्मा ।**
**आसन्नमेवमहहा विषमं पुरस्तात्**
**तत्का गतिर्मम कुकर्मनिमनवृत्तेः ॥ ४० ॥**

**ஸ்ம்ருத்வா(அ)ப்யஹோ ரவிஜ கிங்க்ருதஹுங்க்ருதீனும்**
**முஹ்யாமி யாமி விலயம் ப⁴யவிஹ்வலாத்மா ।**
**ஆஸன்னமேவமஹஹா விஷமம் புரஸ்தாத்**
**தத்கா க³திர்மம குகர்மனிமனவ்ருத்தே: ॥ 40 ॥**

| | | |
|---|---|---|
| **रविज-किंकृत-हुंकृतीनां**<br>**ரவிஜ-கிங்க்ருத-ஹுங்க்ருதீனும்** | = | யமனுடைய கிங்கரர்களின்<br>(படர்களின்) ஹுங்காரங்களை, |

| | | |
|---|---|---|
| **स्मृत्वा अपि**<br>**ஸ்ம்ருத்வா அபி** | = | நினைத்தாலும்கூட, |
| **अहो मुह्यामि**<br>**அஹோ முஹ்யாமி** | = | மயக்கம் அடைகிறேன், |
| **भय-विह्वलात्मा**<br>**ப⁴யவிஹ்வலாத்மா** | = | பயத்தால் தத்தளித்த மனதுடையவனாய், |
| **विलयं यामि**<br>**விலயம் யாமி** | = | நாசத்தை அடைகிறேன், |
| **अहहा**<br>**அஹஹா** | = | அந்தோ! |
| **पुरस्तात्**<br>**புரஸ்தாத்** | = | எதிரில், |
| **एवम्**<br>**ஏவம்** | = | இப்படி, |
| **विषमं**<br>**விஷமம்** | = | (யமகிங்கரர்கள் என்ற) கஷ்டமானது, |
| **आसन्नम् एव**<br>**ஆஸன்னம் ஏவ** | = | நெருங்கியே வந்துவிட்டது, |
| **तत्**<br>**தத்** | = | ஆகையால், |
| **कुकर्म-निमग्न-वृत्तः मम**<br>**குகர்ம-நிமக்³ன-வ்ருத்தঃ மம** | = | கெட்ட காரியங்களில் முழுகின நடத்தையை உடைய எனக்கு, |
| **का गतिः**<br>**கா க³திঃ** | = | என்ன கதிதான் இருக்கிறது? |

நான் செய்த கெட்ட கார்யங்களுக்காக அந்தப் பலனை அனுபவிக்க வேண்டிய நரகங்களில் இருக்கும் யமகிங்கரர்களின் ஹுங்காரங்களை நினைத்தாலேயே இப்பொழுதே எனக்கு மயக்கம் உண்டாகிறது. பயத்தால் தத்தளிக்கிறேன். நாசத்தை அடைகிறேன். கஷ்டமானது எதிரிலேயே நெருங்கிக்கொண்டு வருகிறது. நானோ கெட்ட வழியில் முழுகி விட்டேனே, எனக்கு என்னதான் கதி இருக்கிறது?

**आसन्नपापशतसंभृतघोरपीडः**
**क्रन्दाम्यनन्यगतिकत्ववशात्पुरस्ते ।**
**तस्मात्कथं न दयसे त्वरितं कुतश्चित्**
**आगत्य विश्वमय सान्त्वय मां वराकम् ॥ ४१ ॥**

**ஆஸன்னபாபஶதஸம்ப்⁴ருதகோ⁴ரபீட³:**
**க்ரந்தா³ம்யனன்யக³திகத்வவஶாத்புரஸ்தே ।**
**தஸ்மாத்கத²ம் ந த³யஸே த்வரிதம் குதஶ்சித்**
**ஆக³த்ய விஶ்வமய ஸாந்த்வய மாம் வராகம் ॥ 41 ॥**

| | | |
|---|---|---|
| **आसन्न-पाप-शत-संभृत-** **घोर पीडः** | = | நூற்றுக்கணக்கான பாபங்களினுல் சேர்க்கப்பட்ட கடுந் துன்பங்கள் |
| **ஆஸன்ன-பாப-ஶத-ஸம்ப்⁴ருத-கோ⁴ர-பீட³:** | | வந்து சேர்ந்தவனுய் (நான்), |
| **अनन्य-गतिकत्व-वशात्** | = | வேறு புகலிடம் இல்லாததால், |
| **அனன்ய-க³திகத்வ-வஶாத்** | | |
| **ते पुरः** | = | உமக்கு முன்பு, |
| **தே புர:** | | |
| **क्रन्दामि** | = | கதறுகிறேன், |
| **க்ரந்தா³மி** | | |
| **तस्मात्** | = | ஆகையினுல், |
| **தஸ்மாத்** | | |
| **कथं न दयसे** | = | எப்படித் தயவு செய்யாமல் |
| **கத²ம் ந த³யஸே** | | இருக்கிறீர்? |
| **हे विश्वमय** | = | ஏ ஸர்வ ஸ்வரூபரே |
| **ஹே விஶ்வமய** | | (எங்கும் இருப்பவரே)! |
| **कुतश्चित्** | = | எங்கிருந்தாவது, |
| **குதஶ்சித்** | | |
| **त्वरितं आगत्य** | = | வேகமாக வந்து, |
| **த்வரிதம் ஆக³த்ய** | | |
| **वराकं मां** | = | தீனனுகிய என்னை, |
| **வராகம் மாம்** | | |
| **सान्त्वय** | = | ஆச்வாஸப்படுத்தும். |
| **ஸாந்த்வய** | | |

நான் செய்த கணக்கில்லாத பாபங்களின் பயனை அனுபவிக்கும் ஸமயம் கிட்டிவிட்டது. எனக்குப் புகலிடம் யாதும் இல்லை. தங்கள் முன்பாக நான் கதறுகிறேனே. தாங்கள் ஏன் தயவு செய்யவில்லை? தாங்கள் விச்வமயர் அன்றே! ஸர்வ வ்யாபியாய் எங்கும் இருப்பவர் அன்றே! ஆகையால் எங்கிருந்தாவது வந்து தீனனுகிய என்னை ஆச்வாஸப்படுத்த வேண்டும்.

**விச்வமய:** 'விச்வமய' என்று கவி கூறியிருப்பது மிகவும் பொருத்தமானது. சிவனை எங்கிருந்தாவது வந்து என்னைக் காப்பாற்று என்கிறார். சிவன் இல்லாத இடமே இல்லை. ஆகையால்தான் 'விச்வமய' என்று ஸம்போதனம் செய்கிறார்.

**पश्यन् समानवयसोऽपि यवीयसोऽपि**
**नक्कंदिवं यमभटैरपि नीयमानान् ।**
**आत्मन्यभूवमजरामरताभिमानी**
**यद्विवादकरवं न शुभं कदाचित् ॥ ४२ ॥**

**பஶ்யன் ஸமானவயஸோ(அ)பி யவீயஸோ(அ)பி**
**நக்கந்தி³வம் யமப⁴டைரபி நீயமானான் ।**
**ஆத்மன்யபூ⁴வமஜராமரதாபி⁴மானீ**
**யத்³விவாத³கரவம் ந ஶுப⁴ம் கதா³சித் ॥ 42 ॥**

| | | |
|---|---|---|
| **समान-वयस:अपि**<br>**ஸமான-வயஸஃஅபி** | = | எனக்கு ஸமான வயது உடையவர்களையும், |
| **यवीयस: अपि**<br>**யவீயஸஃ அபி** | = | (எனக்கு வயதில்) சின்னவர்களையும், |
| **नक्कंदिवं**<br>**நக்கந்தி³வம்** | = | இரவிலும் பகலிலும், |
| **यमभटै:**<br>**யமப⁴டைஃ** | = | யம படர்களால், |
| **नीयमानान्**<br>**நீயமானான்** | = | இழுத்துக்கொண்டு போகப்படுபவர்களாக, |
| **पश्यन् अपि**<br>**பஶ்யன் அபி** | = | பார்த்துக் கொண்டிருந்தும், |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | என்னிடத்தில், |
| **अजरता-अमरता-अभिमानी**<br>**அஜரதா-அமரதா-அபி⁴மானீ** | = | கிழத்தனமும் சாவும் இல்லை என்ற அபிமானம் கொண்டவனாய், |
| **अभूवं**<br>**அபூ⁴வம்** | = | இருந்தேன், |
| **यद् – विप्लवात्**<br>**யத்³ - விப்லவாத்** | = | எந்த மேற்கூறிய புத்திக் குழப்பத்தால், |
| **कदाचित्**<br>**கதா³சித்** | = | ஒருபொழுதும், |
| **शुभं**<br>**ஶுப⁴ம்** | = | நல்ல கார்யத்தை, |

**न अकरवं** = நான் செய்யவே யில்லை.

**ந அகரவம்**

இரவிலும் பகலிலும் எனக்கு ஸமானமான வயதுள்ளவர்களேயும் எனக்குக் கீழ் வயதுள்ளவர்களேயும் படர்கள் இழுத்துப் போவதை நேரில் பார்த்துக் கொண்டே யிருக்கிறேன். என் கண் முன்பாக அவர்கள் இறப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தும், நான் மட்டும் இறக்கமாட்டேன் கிழவனுகமாட்டேன் என்ற இந்த அபிமானத்தால் குழப்பம் அடைந்து சுபமான காரியங்கள் ஒன்றும் எப்பொழுதும் செய்யவில்லை.

இதைத் தான் மஹாபாரதத்தில் யக்ஷப்ரச்னத்தில் சொல்லியிருக்கிறது.

**अहन्यहनि भूतानि प्रविशन्ति यमालयम् ।**
**शेषाः स्थावरमिच्छन्ति किमाश्चर्यम् अतः परम् ॥**

**அஹன்யஹனி பூ⁴தானி ப்ரவிஶந்தி யமாலயம் ।**
**ஶேஷாঃ ஸ்தா²வரமிச்ச²ந்தி கிமாஶ்சர்யம் அதঃ பரம் ॥**

- மஹா பாரதம், வநபர்வம், 314.118.

**द्वारे लुठामि करुणं प्रलपामि शंभो**
**वाञ्छामि चुम्बितुमथो परिरभ्य च त्वाम् ।**
**वातूलतामुपगतोऽस्मि तवानुरागात्**
**हा दुःसहस्त्वयि ममैष दृढोऽनुरागः ॥ ४३ ॥**

**த்³வாரே லுடா²மி கருணம் ப்ரலபாமி ஶம்போ⁴**
**வாஞ்சா²மி சும்பி³துமதோ² பரிரப்⁴ய ச த்வாம் ।**
**வாதூலதாமுபக³தோ(அ)ஸ்மி தவானுராகா³த்**
**ஹா து³ঃஸஹஸ்த்வயி மமைஷ த்³ருடோ⁴(அ)னுராக³ঃ ॥ 43 ॥**

**हे शंभो** = ஏ (ஸுகத்தைப் பயக்கும்) சம்புவே!

**ஹே ஶம்போ⁴**

**द्वारे लुठामि** = (உம்) வாசலில் புரளுகிறேன்;

**த்³வாரே லுடா²மி**

**करुणं** = தீனமாக,

**கருணம்**

**प्रलपामि** = பிதற்றுகிறேன்;

**ப்ரலபாமி**

**त्वां परिरभ्य** = உம்மை ஆலிங்கனம் செய்துகொண்டு,

**த்வாம் பரிரப்⁴ய**

चुम्बितुं = முத்தம் கொடுக்க,

சும்பி³தும்

वाञ्छामि = ஆசைப்படுகிறேன்.

வாஞ்சா²மி

तव अनुरागात् = உம்மிடத்தில் இருக்கும் காதலால்,

தவ அனுராகா³த்

वातूलताम् = பைத்யம் பிடித்திருக்கும் தன்மையை,

வாதூலதாம்

उपगतः असिम = அடைந்திருக்கிறேன்,

உபக³தஃ அஸிம

हा = அந்தோ!

ஹா

त्वयि = உம்மிடம்,

த்வயி

मम = எனக்கு,

மம

एष अनुरागः = இந்த அன்பு,

ஏஷ அனுராக³ஃ

दुःसहः = தாங்க முடியாததாய் இருக்கிறது.

து³ஃஸஹ:

நான் வாசலில் புரள்கின்றேன். தீனமாய்ப் பிதற்றுகின்றேன். ஏ சம்போ! உம்மை ஆலிங்கனம் செய்துகொண்டு முத்தம் கொடுக்க விரும்புகிறேன். உம்மேல் இருக்கும் காதலால் பைத்தியம் பிடித்தவன் படும் துன்பங்களை அனுபவிக்கிறேன். அந்தோ! உம்மிடத்தில் எனக்கு இருக்கும் அன்பு என்னல் தாங்க முடியாததாய் இருக்கிறது.

இந்தச் சுலோகம் நாயக - நாயிகா - பாவ வர்ணனை. தேவாரத் திருவாசகங்களில் இம்மாதிரி நாயகியாய்க் கவி தன்னை வர்ணித்துக் கூறுவது வழக்கம். மாணிக்கவாசகப் பெருமான் அகப்பொருள் துறைகளையே முழுவதும் அமைத்த திருக்கோவையார் என்னும் நூலில் பகவானிடம் தனக்கு இருக்கும் காதலை மிக விரிவாகப் பாராட்டியுள்ளார்.

**कण्ठेऽर्पयत्युरगपाशमस्चयया मे**
**यामिन्यधीशशिख यत्समये कृतान्तः ।**
**नूनं तदा मुहुरुपैमि फणीन्द्रहार**
**त्वत्तुल्यतामिति भजे मरणेऽपि हर्षम् ॥ ४४ ॥**

**கண்டே²(அ)ர்பயத்யுரக³பாஶமஸூயயா மே**
**யாமின்யதீ⁴ஶஶிக² யத்ஸமயே க்ருதாந்த: ।**
**நூனம் ததா³ முஹுருபைமி ப²ணீந்த்³ரஹார**
**த்வத்துல்யதாமிதி ப⁴ஜே மரணே(அ)பி ஹர்ஷம் ॥ 44 ॥**

| | | |
|---|---|---|
| **हे यामिनी - अधीश शिरव**<br>**ஹே யாமினீ - அதீ⁴ஶ ஶிரவ** | = | ராத்ரிக்கு அதிபதியான சந்திரனைத் தலையில் தரிக்கும் சந்திரசேகர! |
| **म कण्ठे**<br>**ம கண்டே²** | = | என்னுடைய கழுத்தில், |
| **यत्समये**<br>**யத்ஸமயே** | = | எந்த ஸமயத்தில், |
| **असूयया**<br>**அஸூயயா** | = | பொறுமையால், |
| **कृतान्त:**<br>**க்ருதாந்த:** | = | யமனானவன், |
| **उरगपाशं**<br>**உரக³பாஶம்** | = | நாக பாசத்தை, |
| **अर्पयति**<br>**அர்பயதி** | = | போடுகிறானோ, |
| **तदा**<br>**ததா³** | = | அப்பொழுது, |
| **नूनं**<br>**நூனம்** | = | நிச்சயமாய், |
| **हे फणीन्द्रहार**<br>**ஹே ப²ணீந்த்³ரஹார** | = | நாகத்தை மாலையாக உடைய பரமசிவ! |
| **मरणे अपि**<br>**மரணே அபி** | = | மரணத்திலும், |
| **त्वत्तुल्यताम्**<br>**த்வத்துல்யதாம்** | = | உம்முடன் ஸமானமாய் இருக்கும் தன்மையை, |
| **उपमि**<br>**உபமி** | = | அடைகின்றேன், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **मुहु:**<br>**முஹு:** | = | அடிக்கடி, |
| **हष भजे**<br>**ஹஷ ப⁴ஜே** | = | ஸந்தோஷத்தை அடைகிறேன். |

கடைசிக் காலத்தில் யமன் என்னை அழைத்துக் கொண்டு போகும்போது தனது நாக பாசத்தை என் கழுத்தில் போடுகிறுன். அப்பொழுது எனக்கு வருத்தமில்லை. ஏ சந்திரசேகர! தங்களுக்கு நாகங்கள் ஆபரணமாக ஆகவில்லையா? அதே மாதிரி யமன் என்மேல் போட்ட நாக பாசத்தையும் ஆபரணமாக எண்ணிக் கொண்டு தங்களுக்கு ஸமானமான ரூபத்தை அதாவது ஸாரூப்யத்தை அடைந்ததாக எண்ணிக்கொள்ளு கிறேன். ஆகையால் இப்படி நாக பாசத்துடன் இறப்பதிலும் எனக்குச் சந்தோஷந்தான்.

இதுவும் முன் சுலோகம்போல் நாயக - நாயிகா பாவத்தைக் காட்டுகிறது. நாயகி நாயகனுடைய வேஷத்தைத் தரித்துக்கொண்டும் நாயகன் செய்யும் கார்யங்களை எல்லாம் தான் செய்துகொண்டும், சந்தோஷிப்பதைக் கவிகள் வர்ணிப்பது வழக்கம். இதை நாட்டிய சாஸ்திரத்தில் '**லீலா**' (**लीला**) என்று பரதமுனி வர்ணிக்கிறுர்.

**वागङ्गालङ्कारैः श्लिष्टैः प्रीतिप्रयोजितैर्मधुरैः ।**
**इष्टजनस्यानुकृतिर्लीला ज्ञेया प्रयोगज्ञैः ॥**
**भरतनाव्यशास्त्रम् ।**

**வாக³ங்கா³லங்காரைः ஶ்லிஷ்டைः ப்ரீதிப்ரயோஜிதைர்மது⁴ரைः ।**
**இஷ்டஜனஸ்யானுக்ருதிர்லீலா ஜ்ஞேயா ப்ரயோக³ஜ்ஞைः ॥**
**ப⁴ரதனாவ்யஶாஸ்த்ரம் ।**

**चित्तं न पारदमिव क्षणमुज्झतीदं**
**चाञ्चल्य विप्लवमयुक्तिविदः प्रभो मे ।**
**तस्मात् कथं भवति भक्तिरसस्य सिद्धिः**
**कस्तां विना च भवघोरविषद्विनाशः ॥ ४५ ॥**

**சித்தம் ந பாரத³மிவ க்ஷணமுஜ்ஜ²தீத³ம்**
**சாஞ்சல்ய விப்லவமயுக்திவித³ः ப்ரபோ⁴ மே ।**
**தஸ்மாத் கத²ம் ப⁴வதி ப⁴க்திரஸஸ்ய ஸித்³தி⁴ः**
**கஸ்தாம் வினா ச ப⁴வகோ⁴ரவிஷத்³விநாஶः ॥ 45 ॥**

**प्रभो** = ஏ ஸ்வாமி!
**ப்ரபோ⁴**
**अयुक्तिविदः** = உபாயம் ஒன்றும் தெரியாத,
**அயுக்திவித³ः**
**मे** = என்னுடைய,
**மே**

| | | |
|---|---|---|
| **चित्तं** | = | மனது, |
| **சித்தம்** | | |
| **चाञ्चल्य** | = | சாஞ்சல்ய ஸ்வபாவத்தால் நிலையற்ற |
| **சாஞ்சல்ய** | | தன்மையை, |
| **पारदम् इव** | = | ரஸம்போல், |
| **பாரத³ம் இவ** | | |
| **क्षणं न उज्झति** | = | ஒரு க்ஷணம் கூட விடுகிறதில்லை, |
| **க்ஷணம் ந உஜ்ஜ²தி** | | |
| **तस्मात्** | = | ஆகையால் (எனக்கு), |
| **தஸ்மாத்** | | |
| **भक्ति रसस्य** | = | பக்தி ரஸத்தின், |
| **ப⁴க்தி ரஸஸ்ய** | | |
| **सिद्धिः** | = | ஸித்தியானது (கை கூடுதலானது) |
| **ஸித்³தி⁴:** | | |
| **कथं भवति** | = | எப்படி உண்டாகும்? |
| **கத²ம் ப⁴வதி** | | |
| **तां विना** | = | அந்த பக்தி ரஸஸித்தி இல்லாமல் |
| **தாம் வினா** | | |
| **भव-घोर-विषद्-विनाशः च कः** | = | ஸம்ஸாரமாகிற கோரமான ஆபத்தின் |
| **ப⁴வ-கோ⁴ர-விஷத்³-விநாஶ: ச க:** | | நாசமும் ஏது? |

உபாயம் தெரியாத என்னுடைய மனமானது ரஸத்தைப்போல் ஒரு நிமிஷமும் ஒரு இடத்தில் ஸ்திரமாய் இருக்கிறதில்லை. ஆகையால் எனக்குப் பக்தி ரஸத்தின் ஸித்தி எப்படி உண்டாகும்? அந்தப் பக்தி ரஸத்தின் ஸித்தி இருந்தால் அன்றோ ஸம்ஸாரமாகிய கோரமான ஆபத்தை நாசம் செய்ய முடியும்.

ரஸம் என்னும் பதத்தைக் கவி மிகச் சமத்காரமாய் உபயோகப் படுத்தியிருக்கிறார். ரஸம் என்பது ஒரு க்ஷணம் கூட ஒரு இடத்தில் நில்லாது எப்பொழுதும் சஞ்சலஸ்வபாவம் உள்ளது. இந்த ரஸத்தினால் யோகிகள் யோகஸித்தி அடைவார்கள் என்று சாஸ்திரங்கள் கூறும். ஆனால் கவி தன்னிடம் பக்தி ரஸம் இல்லை, சஞ்சலஸ்வபாவம், ரஸத்தின் குணம், இருக்கிறது என்கிறார். மேலும் ரஸஸித்தி அதாவது ரஸத்தைக்கட்டியல்லவோ அதை ஒரு விபத்துக்கு மருந்தாக உபயோகப் படுத்த முடியும். அது முடியவில்லையே என்கிறார் கவி.

**स्वामिन्ननुद्गत विवेकलवोऽकृतात्मा**
**तिर्यग्वदेव दिवसान तिवाहयामि ।**
**नेता क्षणाच्च वशमन्तकसौनिको माम्**
**आशैव तन्मम कुतः सुगतिप्रसक्त्यै ॥ ४६ ॥**

**ஸ்வாமின்னனுத்³க³த விவேகலவோ(அ)க்ருதாத்மா**
**திர்யக்³வதே³வ தி³வஸான திவாஹயாமி ।**
**நேதா க்ஷணச்ச வஶமந்தகஸௌனிகோ மாம்**
**ஆஶைவ தன்மம குத꞉ ஸுக³திப்ரஸக்த்யை ॥ 46 ॥**

| | | |
|---|---|---|
| **हे स्वामिन्** ஹே ஸ்வாமின் | = | ஏ ஸ்வாமின்! |
| **अनुद्गत-विवेक-लवः** அனுத்³க³த-விவேக-லவ꞉ | = | விவேகத்தின் லேசமும் உண்டாகாதவனாயும், |
| **अकृतात्मा** அக்ருதாத்மா | = | தன்னைத் தான் வசப்படுத்திக் கொள்ளாதவனாயும், |
| **तिर्यग्वदेव** திர்யக்³வதே³வ | = | ம்ருகங்களைப்போல, |
| **दिवसान्** தி³வஸான் | = | நாட்களை, |
| **अतिवाहयामि** அதிவாஹயாமி | = | கழிக்கிறேன், |
| **क्षणात्** க்ஷணாத் | = | ஒரு க்ஷணத்தில், |
| **उन्तक-सौनीकः** உந்தக-ஸௌனீக꞉ | = | கொலையாளியாகிய யமன், |
| **मां** மாம் | = | என்னை, |
| **वशं नेता** வஶம் நேதா | = | தன் வசம் கொண்டுபோகப் போகிறான். |
| **तत्** தத் | = | ஆகையால், |
| **मम** மம | = | எனக்கு, |
| **सुगति-प्रसक्त्यै** ஸுக³தி-ப்ரஸக்த்யை | = | நல்லகதி ஏற்படும் என்பதற்கு, |
| **आशा एव कुतः** ஆஶா ஏவ குத꞉ | = | நம்பிக்கைகூட எங்கிருந்து உண்டாகும்? |

ஏ ஸ்வாமின்! விவேகத்தின் லேசமும் உண்டாகவில்லை. இந்திரிய நிக்ரஹமும் செய்யவில்லை. தினந்தோறும் மிருகங்களைப்போல் நாட்களைக் கழித்து வருகிறேன். இந்தப் பாழும் யமன் வந்து ஒரு நிமிஷத்தில் கொண்டுபோய்விடப் போகிறான். எனக்கு நல்லகதி கிடைக்கும் என்ற நம்பிக்கை எங்கிருந்து உண்டாகும்?

**திர்யக்:** ஆதி ஆசார்யர்களான ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் ஆத்மஞானமில் லாதவர்களைப்பற்றி

**पश्वादिभिश्च अविशेषात्**

**பஶ்வாதி³பி⁴ஶ்ச அவிஶேஷாத்**

என்று பிரம்ம ஸூத்ர பாஷ்யோபக்ரமத்தில் மிருகங்களுக்கும் ஆத்மஜ்ஞான மில்லா தவர்களுக்கும் யாதொரு வித்யாஸமும் இல்லை என்று சொல்லுகிறார்.

**दुःस्वप्न एष विषमो भवदुःखनामा**
**स्वामिन् कथं त्यजति मां विगतप्रबोधम् ।**
**यस्मान्ममानवरतश्रुतभूरिशास्त्र**
**तूर्यस्खनैरपि न शाम्यति मोहनिद्रा ॥ ४७ ॥**

**து³ஃஸ்வப்ன ஏஷ விஷமோ ப⁴வது³ஃக²நாமா**
**ஸ்வாமின் கத²ம் த்யஜதி மாம் விக³தப்ரபோ³த⁴ம் ।**
**யஸ்மான்மமானவரதஶ்ருதபூ⁴ரிஶாஸ்த்ர**
**தூர்யஸ்க²னைரபி ந ஶாம்யதி மோஹநித்³ரா ॥ 47 ॥**

**यस्मात्** = எதனால்,
**யஸ்மாத்**

**मम** = எனது,
**மம**

**मोहनिद्रा** = மோக நித்ரையானது,
**மோஹநித்³ரா**

**अनवरत-श्रुत-भूरि-शास्त्र-तूर्य-स्खनैः अपि** = இடைவிடாமல் கேட்கப்பட்ட அநேக சாஸ்திரங்கள் ஆகிற பறைகளின் சப்தங்களாலும்,
**அனவரத-ஶ்ருத-பூ⁴ரி-ஶாஸ்த்ர-தூர்ய-ஸ்க²னைஃ அபி**

**न शाम्यति** = முடிவடையவில்லையோ, அப்படிப்பட்ட,
**ந ஶாம்யதி**

**भव-दुःख-नामा** = ஸம்ஸார துக்கம் என்று பெயர்கொண்ட,
**ப⁴வ-து³ஃக²-நாமா**

**एषः** = இந்த,
**ஏஷஃ**

**विषमः** = கொடிய,
**விஷமஃ**

**दुःस्वप्न** = கெட்ட ஸ்வப்னம்,
**து³ஃஸ்வப்ன**

| | | |
|---|---|---|
| **विगतप्रबोधमां**<br>**விக³தப்ரபோ³த⁴மாம்** | = | விழிப்பை இழந்த (தூங்கிக் கொண்டிருக்கும்) என்னை, |
| **हे स्वामिन्**<br>**ஹே ஸ்வாமின்** | = | ஏ நாத! |
| **कथं त्यजति**<br>**கத²ம் த்யஜதி** | = | எப்படி விடும்? |

மோஹமென்னும் தூக்கமானது சாஸ்திரங்களைக் கேட்டல் என்னும் வாத்ய கோஷங்களாலேயே முடிவு அடைகிறதில்லையே? அப்படி இருக்க ஸம்ஸாரத்தின் துக்கம் என்று பெயர்கொண்ட கொடிய கெட்ட ஸ்வப்னம் தூங்கிக்கொண்டு இருக்கும் என்னை எப்படி விடும்?

கும்பகர்ணனுடைய நித்ரை போன்ற தூக்கம் தன்னுடைய மோகம் என்று கவி மனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்.

**कृत्वा पापमसावपोष्यत निजः कायो न दीनो जनः**
**वैवश्याल्लुठितं चिरं चरणयोः स्त्रीणां गुरूणां न तु ।**
**लोभोऽकारि मया धने न सुकृते तेनानुतप्ये महत्**
**किं शक्यं मम तत्र कर्तुमधुना नाथ त्वमेका गतिः ॥ ४८ ॥**

**க்ருத்வா பாபமஸாவபோஷ்யத நிஜঃ காயோ ந தீ³னோ ஜனঃ**
**வைவஶ்யால்லுடி²தம் சிரம் சரணயோঃ ஸ்த்ரீணாம் கு³ரூணாம் ந து ।**
**லோபோ⁴(அ)காரி மயா த⁴னே ந ஸுக்ருதே தேனானுதப்யே மஹத்**
**கிம் ஶக்யம் மம தத்ர கர்துமது⁴னா நாத² த்வமேகா க³திঃ ॥ 48 ॥**

| | | |
|---|---|---|
| **पापं कृत्वा**<br>**பாபம் க்ருத்வா** | = | பாபத்தைச் செய்து, |
| **असौ**<br>**அஸௌ** | = | இந்த, |
| **निजः कायः**<br>**நிஜঃ காயঃ** | = | என்னுடைய தேகம், |
| **अपोष्यत**<br>**அபோஷ்யத** | = | வளர்க்கப்பட்டது, |
| **दीनो जनः**<br>**தீ³னோ ஜனঃ** | = | ஏழை ஜனம், |
| **न (अपोष्यत)**<br>**ந (அபோஷ்யத)** | = | போஷிக்கப்படவில்லை, |
| **वैवश्यात्**<br>**வைவஶ்யாத்** | = | பரவசமான தன்மையால், |

**स्त्रीणां** = ஸ்த்ரீகளுடைய,

**ஸ்த்ரீணும்**

**चरणयोः** = கால்களில்,

**சரணயோ:**

**चिरं** = வெகுகாலம்,

**சிரம்**

**लुठितं** = புரளப்பட்டது,

**லுடி2தம்**

**गुरूणां** = ஆனுல் குருவானவர்களுடைய,

**கு3ரூணும்**

**(चरणयोः)** = (கால்களில்)

**(சரணயோ:)**

**न तु (लुठितं)** = புரளப்படவில்லை,

**ந து (லுடி2தம்)**

**धने** = தனத்தில்,

**த4னே**

**लोभः** = பேராசையானது,

**லோப4:**

**अकारि** = வைக்கப்பட்டது,

**அகாரி**

**सुकृते न (लोभः अकारि)** = (ஆனுல்) நல்ல காரியம் செய்வதில்

**ஸுக்ருதே ந (லோப4: அகாரி)** (ஆசை வைக்கப்பட) இல்லை,

**तेन** = அதனுல்,

**தேன**

**महत्** = மிகவும்,

**மஹத்**

**अनुतप्ये** = வருந்துகிறேன்,

**அனுதப்யே**

**मम** = எனக்கு,

**மம**

**तत्र** = மேற்சொன்ன விஷயத்தில்,

**தத்ர**

**किं कर्तुं शक्यं** = என்ன செய்ய முடியும்?

**கிம் கர்தும் ஶக்யம்**

**हे नाथ** = ஏ ஸ்வாமின்!

**ஹே நாத2**

**अधुना** = இப்பொழுது,

**அது⁴ன**

**त्वं** = நீர்,

**த்வம்**

**एका गतिः** = ஒரே கதி.

**ஏகா க³தி:**

பல பாபங்களைச் செய்து இந்த என்னுடைய தேகத்தை வளர்த்தேனே யொழிய ஏழை ஜனங்களுக்கு அன்னம் இட்டு அறியேன். பரவசனாய் ஸ்திரீகள் கால்களில் விழுந்தேனே ஒழியக் குருவின் பாத கமலங்களில் ஸேவை செய்யவில்லை. பணத்தை ஸம்பாதிக்கப் பேராசை கொண்டேனே யொழிய ஸத்கார்யங்கள் செய்ய ஆசை கொள்ளவில்லை. இப்படி வாழ்நாளைக் கழித்ததால் மிகவும் வருந்துகின்றேன். இப்பொழுது என்னால் என்ன செய்ய முடியும்? தாங்கள் தாம் இப்பொழுது எனக்கு ஒப்பற்ற ஒரே கதி.

**अहं पापी पापक्षपणनिपुणः शंकर भवान्**
**अहं भीतो भीताभयवितरणे ते व्यसनिता ।**
**अहं दीनो दोनोद्धरणविधिसञ्जस्त्वमितरत्**
**न जानेऽहं वक्तुं कुरु सकलशोच्ये मयि दयाम् ॥ ४९ ॥**

**அஹம் பாபீ பாபக்ஷபணநிபுண: ஶங்கர ப⁴வான்**
**அஹம் பீ⁴தோ பீ⁴தாப⁴யவிதரணே தே வ்யஸனிதா ।**
**அஹம் தீ³னோ தோ³னோத்³த⁴ரணவிதி⁴ஸஞ்ஜஸ்த்வமிதரத்**
**ந ஜானே(அ)ஹம் வக்தும் குரு ஸகலஶோச்யே மயி த³யாம் ॥ 49 ॥**

**अहं पापी** = நானே பாபி,

**அஹம் பாபீ**

**हे शंकर** = ஏ சங்கர!

**ஹே ஶங்கர**

**भवान्** = நீரோ,

**ப⁴வான்**

**पाप-क्षपण-निपुणः** = பாபத்தைப் போக்குவதில் ஸமர்த்தர்,

**பாப-க்ஷபண-நிபுண:**

**अहं भीतः** = நானே பயந்தவன்,

**அஹம் பீ⁴த:**

**भीत-अभयवितरणे** = பயப்பட்டவர்களுக்கு அபயம் அளிப்பதில்,

**பீ⁴த-அப⁴யவிதரணே**

**ते** = உமக்கு,

**தே**

**व्यसनिता** = விசேஷமான ஈடுபாடு,

**வ்யஸனிதா**

**अहं दोनः** = நானோ தீனன்,

**அஹம் தோ3னः**

**त्वं दोन-उद्धरण-विधि-सञ्जः** = நீரோ தீனர்களைக் கை தூக்கிவிடும் காரியத்தில் ஸஜ்ஜரானவர்,

**த்வம் தோ3ன-உத்3த4ரண-விதி4-ஸஞ்ஜः**

**इतरत्** = இதைத் தவிர வேறு ஒன்றும்,

**இதரத்**

**वक्तुं** = சொல்ல,

**வக்தும்**

**न जाने** = நான் அறியேன்,

**ந ஜானே**

**सकल-शोच्ये मयि** = எல்லாராலும் எல்லாவிதத்திலும் வருந்தத்தக்கவனான என்னிடம்,

**ஸகலஶோச்யே மயி**

**दयां कुरु** = தயையைச் செய்யுங்கள்.

**த3யாம் குரு**

நானோ பாவி, நீரோ பாபத்தைப் போக்குவதில் ஸமர்த்தர். நானோ பயந்தவன், நீரோ பயந்தவர்களுக்கு அபயம் (பயமில்லாதிருக்கும் தன்மையை) அளிப்பதில் விசேஷ ஈடுபாடு உடையவர். நானோ தீனன், நீரோ தீனர்களைக் கைதூக்கிவிடும் கார்யத்தில் ஸஜ்ஜரானவர். இதைத் தவிர வேறு ஒன்றும் நான் சொல்ல அறிகிலேன். எல்லாவிதத்திலும் வருந்தத்தக்கவனுகிய என்னிடம் தயை செய்யுங்கள்.

**इति परिहृतवान् स्वकाव्यशिल्प**
**प्रकटनमाकुलितो भवव्यथाभिः ।**
**व्यधित गिरिश रम्यदेवजन्मा**
**तव पुरतो हठदैन्यतः प्रलापान् ॥ ५० ॥**

**இதி பரிஹ்ருதவான் ஸ்வகாவ்யஶில்ப**
**ப்ரகடனமாகுலிதோ ப4வவ்யதா2பி4: ।**
**வ்யதி4த கி3ரிஶ ரம்யதே3வஜன்மா**
**தவ புரதோ ஹட2தை3ன்யத: ப்ரலாபான் ॥ 50 ॥**

**हे गिरिश** = ஏ பரமசிவ!

**ஹே கி3ரிஶ**

| | | |
|---|---|---|
| **इति**<br>**இதி** | = | இந்த ப்ரகாரம், |
| **भवव्यथाभिः**<br>**ப⁴வவ்யதா²பி⁴꞉** | = | ஸம்ஸார துக்கங்களினால், |
| **आकुलितो रम्यदेव-जन्मा**<br>**ஆகுலிதோ ரம்யதே³வ-ஜன்மா** | = | துன்புறுத்தப்பட்டவனான ரம்யதேவனுக்கு புத்திரனான (லோஷ்டதேவன்), |
| **स्व-काव्य-शिल्प-प्रकटनम्**<br>**ஸ்வ-காவ்ய-ஶில்ப-ப்ரகடனம்** | = | தன்னுடைய காவ்யக் கலையின் ப்ரகடனத்தை, |
| **परिहृतवान्**<br>**பரிஹ்ருதவான்** | = | பரிஹரித்தவனாய், |
| **प्रलापान्**<br>**ப்ரலாபான்** | = | இந்தப் புலம்பல்கள் அடங்கிய ஸ்தோத்திரத்தை, |
| **तव पुरतः**<br>**தவ புரத꞉** | = | தங்களுக்கு முன்பு, |
| **हठदैन्यतः**<br>**ஹட²தை³ன்யத꞉** | = | மிகவும் எளிமையினால், |
| **व्यधित**<br>**வ்யதி⁴த** | = | செய்தான். |

இந்த ப்ரகாரம் ரம்யதேவரின் புத்ரனாகிய லோஷ்தேவனாகிய நான் மற்ற காவ்யங்களை இயற்றுதல் என்ற தோஷத்திற்கு இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்ரத்தைச் செய்த ப்ராயச்சித்தத்தால் பரிஹாரஞ் செய்துகொண்டேன். புலம்பல்கள் அடங்கிய இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்தை உமக்கு முன்பு இயற்றினேன்.

**குறிப்பு**: - 50, 51, 52, 53 ச்லோகங்களால் இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்ரம் காசியில் ஶ்ரீ விச்வேச்வரருக்கு முன்பு இயற்றப்பட்டு ஶ்ரீ விச்வேச்வரருக்கு நேரிலேயே ஸமர்ப்பணம் செய்யப்பட்டதென்று ஸ்பஷ்டமாக த்வனிக்கின்றது.

**एतत्तीव्रम् व्रतमुपचितं सैकते सिद्धसिन्धोः**
**वाराणस्यां शमदमदृशोरेष गाढोऽनुबन्धः ।**
**दीनाक्रन्दं प्रति पशुपतेरुद्यमश्चाटुकानि**
**त्यक्त्वा राज्ञां बत मम शुभैस्तन्यते धन्यतेयम् ॥ ५१ ॥**

**ஏதத்தீவ்ரம் வ்ரதமுபசிதம் ஸைகதே ஸித்³த⁴ஸிந்தோ⁴꞉**
**வாராணஸ்யாம் ஶமத³மத்³ருஶோரேஷ கா³டோ⁴(அ)னுப³ந்த⁴꞉ ।**
**தீ³னாக்ரந்த³ம் ப்ரதி பஶுபதேருத்³யமஶ்சாடுகானி**
**த்யக்த்வா ராஜ்ஞாம் ப³த மம ஶுபை⁴ஸ்தன்யதே த⁴ன்யதேயம் ॥ 51 ॥**

| | | |
|---|---|---|
| **वाराणस्यां** | = | காசியில், |
| **வாராணஸ்யாம்** | | |
| **सिद्धसिन्धोः सैकते** | = | ஸித்தர்களால் சேவிக்கப்பட்ட நதியான |
| **ஸித்³த⁴ஸிந்தோ⁴: ஸைகதே** | | கங்கையின் மணலில் (கரையில்) |
| **एतत्** | = | இந்த, |
| **ஏதத்** | | |
| **तीव्रं व्रतम् उपचितं** | = | இந்த தீவ்ரமான வ்ரதம் |
| **தீவ்ரம் வ்ரதம் உபசிதம்** | | அனுஷ்டிக்கப்பட்டது, |
| **शम-दम-दृशोः** | = | சமம், தமம் என்ற இரண்டு |
| **ஶம-த³ம-த்³ருஶோ:** | | த்ருஷ்டிகளை அடைவதன் பொருட்டு, |
| **एषः** | = | இந்த, |
| **ஏஷ:** | | |
| **गाढः अनुबन्धः** | = | திருடமான தொடர்ந்த முயற்சியானது |
| **கா³ட⁴: அனுப³ந்த⁴:** | | வைத்துக் கொள்ளப்பட்டது, |
| **राज्ञां** | = | ராஜாக்களுக்கு ப்ரீதியான, |
| **ராஜ்ஞாம்** | | |
| **श्चाटुकानि** | = | சாடுமொழிகளை, |
| **ஶ்சாடுகானி** | | |
| **त्यक्त्वा** | = | விட்டு விட்டு, |
| **த்யக்த்வா** | | |
| **पशुपतेः** | = | பசுபதியைக் குறித்து, |
| **பஶுபதே** | | |
| **दीनाक्रन्दं प्रति** | = | (என் ஏழ்மையால் எழுந்த கதறல் ரூபமான) |
| **தீ³னாக்ரந்த³ம் ப்ரதி** | | இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்திற்காக, |
| **उद्यमः** | = | முயற்சியானது (எடுத்துக் கொள்ளப்பட்டது), |
| **உத்³யம:** | | |
| **इयं धन्यता** | = | இந்த கிருதார்த்தமாகுதல், |
| **இயம் த⁴ன்யதா** | | |
| **तन्यते** | = | விரிவாய்ச் செய்யப்பட்டு வருகிறது. |
| **தன்யதே** | | |

ஞானம் என்பதற்கு 'சமம்' 'தமம்' என்பது இரண்டு கண்கள். இதை அடையக் காசியில் கங்கைக் கரையை விட்டு ஆயுஸு வரையில் அகலுவதில்லை என்று காசிக்ஷேத்திரத்தில் "க்ஷேத்திர ஸந்யாஸம்" என்னும் விரதத்தைக் கைக்கொண்டேன். ராஜாக்களுக்கு ப்ரீதியான சாடுக்கள் இயற்றுவதை விட்டுவிட்டேன். பசுபதியான விச்வேச்ரரின் பொருட்டு இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்தை இயற்றினேன். இதனால் நான் தந்யன் ஆனேன்.

**கங்கை:** "இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் 'காணுமற் கோணுமற் கண்டு கொடு; ஆடு; காண்; போகுது பார் போகுது பார்'; என்ருர். முதல் மூன்றும் மூன்றுகால ஸந்த்யாவந்தனத்தையும் குறிக்கும்; ஆடு என்றால் நீராடு; கங்கையில் ஸ்நானமும் பண்ணு என்பது அர்த்தம்; காண் என்றல் ஸேது தர்சனம் பண்ணு என்று அர்த்தம்; போகுது என்றல் ஷெ கங்கா ஸ்நாநத்தாலும் ஸேது தர்சனத்தாலும் நம் பாபம் துலைகிறது; இதைப் பார் என்று சொன்னுர். ஜன்மத்தில் ஒருதரமாவது கங்கா ஸ்நானமும் ஸேது தர்சனமும் பண்ணவேண்டும்."

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I. 500-501 பக்கம்.

**காசி:** "உலகத்தில் உள்ள க்ஷேத்திரங்களுள் காசி அதிக மகிமையுடையது என்று நினைக்கப்படுகிறது. வேறு க்ஷேத்திரங்களைப்பற்றி சொல்லும்போதெல்லாம் அவை காசிக்கு ஸமானமானவை என்கிருர்கள். அதனுல் காசியினுடைய மகிமை தெரிகிறது. காசியை உபமானமாகச் சொல்லிச்சொல்லி அதற்கு இன்னும் கௌரவத் தை உண்டாக்கி வருகிருர்கள். 100 வருஷங்களுக்கு முன் ஒரு கவி உத்தம க்ஷேத்திரங்களுக்குள் எதை உபமானமாகச் சொல்லிப் பிரசித்திவருகிறதோ அது காசி, அங்கே பக்தியாகிய காசைக் கொடுத்தால் முக்தியைச் சுலபமாக வாங்கலாம், அது கிடைக்கும் கடைத்தெருவு காசிதான் என்று சொல்லி யிருக்கிருர்கள்.

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I 239-260.

"காசி மகா க்ஷேத்ரம். அங்கே விச்வேச்வரர் இறந்து போகும் ஒவ்வொரு பிராணிக்கும் ஞானேபதேசம் செய்து முக்தி கொடுக்கிருர். இந்த வகையில் இல்லா மல் வேறு விதத்திலும் காசி க்ஷேத்திரத்திற்கு விசேஷம் இருக்கிறது. நம்முடைய தேசத்தில் அநேக மதங்கள் இருக்கின்றன எல்லா மதங்களுடைய பிரதிநிதிகளும் காசி க்ஷேத்திரத்தில் இருப்பார்கள். அந்தக் காலத்தில் மஹா பண்டிதர்கள் இருந்த ஸ்தானமாக அது இருந்தது. யாத்திரை பண்ணிக்கொண்டே பல பேர்கள் அங்கு வந்து தங்கி இருப்பார்கள். நம்முடைய தேசத்தில் எத்தனை ஜாதி, எத்தனை மதங்கள், எத்தனை பாஷைகள் இருக்கின்றனவோ அவ்வளவையும் அங்கே பார்க்கலாம். ஆகையால் அங்கே போய்ப் பிரசாரம் செய்தால் லோகம் முழுவதும் பிரசாரம் ஆகும் என்று நமது ஸ்ரீ ஆதி ஆசார்யாளவர்கள் நினைத்தார்கள். பல தேசங்களில் உள்ள வைதிகர்கள் (வேதம் அறிந்த வித்வான்கள்) அங்கே இருந்தார்கள். ஆகையால் ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகள் காசி க்ஷேத்திரத்தில் இருக்கும் பொழுது பிரம்ம ஸூத்ர பாஷ்யம் இயற்றினார். அதனால் காசியில் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் பண்ணினது லோகப்ரசாரத்திற்கு ஏது (ஹேது) வாயிற்று. அங்கே பல மதஸ்தர்களுடைய கொள்கைகளை நிராகரணம் பண்ணி ஔபநிஷதமான மதத்தை ஸ்தாபித்தார்."

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் II. சங்கர விஜயம் 155-153.

**अभ्रंशे जन्म वंशे सुमहति विहितो वाययाव्धौ हनूमत्-
संरम्भो दानभोगौ तदनु च रचितौ किंचिदौचित्यरीत्या ।
ज्ञात्वा तत्त्वं यतित्वं श्रितमथ मथिता संसृतिर्दुर्निवारा
वाराणस्यां प्रसन्ना स्थितिरिति कृतिनः किं न मे नाम सिद्धम् ॥ ५२ ॥**

**அப்⁴ரம்ஶே ஜன்ம வம்ஶே ஸுமஹதி விஹிதோ வாயயாவ்தௌ⁴ ஹனூமத்-
ஸம்ரம்போ⁴ தா³னபோ⁴கௌ³ தத³னு ச ரசிதௌ கிஞ்சிதௌ³சித்யரீத்யா ।
ஜ்ஞாத்வா தத்த்வம் யதித்வம் ஶ்ரிதமத² மதி²தா ஸம்ஸ்ருதிர்து³ர்நிவாரா
வாராணஸ்யாம் ப்ரஸன்னா ஸ்தி²திரிதி க்ருதினஃ கிம் ந மே நாம ஸித்³த⁴ம்
॥ 52 ॥**

| | | |
|---|---|---|
| **अभ्रंशे सुमहति वंशे जन्म**<br>**அப்⁴ரம்ஶே ஸுமஹதி வம்ஶே ஜன்ம** | = | வழுவில்லாத உயர்ந்த வம்சத்தில் பிறப்பு, |
| **वाययाव्धौ**<br>**வாயயாவ்தௌ⁴** | = | காவ்யம் என்கிற சமுத்திரத்தில், |
| **हनूमत्संरम्भः**<br>**ஹனூமத்ஸம்ரம்ப⁴ஃ** | = | ஹனுமாரைப்போல் தாண்டுதல், |
| **विहितः**<br>**விஹிதஃ** | = | செய்யப்பட்டது, |
| **तदनु**<br>**தத³னு** | = | அதற்குப்பிறகு, |
| **औचित्यरीत्या**<br>**ஔசித்யரீத்யா** | = | உசிதமான முறையில், |
| **दानभोगौ च**<br>**தா³னபோ⁴கௌ³ ச** | = | தானமும் காமபோகமும், |
| **किंचित्**<br>**கிஞ்சித்** | = | கொஞ்சம், |
| **रचितौ**<br>**ரசிதௌ** | = | செய்யப்பட்டன, |
| **तत्त्वं ज्ञात्वा**<br>**தத்த்வம் ஜ்ஞாத்வா** | = | தத்வத்தை உணர்ந்து, |
| **यतित्वं श्रितं**<br>**யதித்வம் ஶ்ரிதம்** | = | ஸந்யாஸமும் கொள்ளப்பட்டது, |
| **अथ**<br>**அத²** | = | அதன்மேல், |

| | | |
|---|---|---|
| **दुर्निवारा**<br>**து³ர்நிவாரா** | = | தடுக்கமுடியாத, |
| **संसृति:**<br>**ஸம்ஸ்ருதி:** | = | ஸம்ஸாரம், |
| **मथिता**<br>**மதி²தா** | = | கடையப்பட்டது, |
| **वाराणस्यां**<br>**வாராணஸ்யாம்** | = | காசியில், |
| **स्थिति:**<br>**ஸ்தி²தி:** | = | வாஸம், |
| **प्रसन्ना**<br>**ப்ரஸன்னு** | = | நன்கு ஏற்பட்டது, |
| **इति**<br>**இதி** | = | இந்தப்ரகாரம், |
| **कृतिन:**<br>**க்ருதின:** | = | கார்யம் கைகூடிய, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **किं नाम**<br>**கிம் நாம** | = | எதுதான், |
| **न सिद्धम्**<br>**ந ஸித்³த⁴ம்** | = | ஸித்திக்கவில்ஜல. |

நான் மாசற்ற வம்சத்தில் பிறந்தேன். ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டி யதைப்போல் நான் காவ்யம் என்னும் ஸமுத்ரத்தைத் தாண்டினேன். அதாவது பல காவியங்கஜள இயற்றினேன். பிறகு சாஸ்த்ரங்களில் கூறியபடி தானம் செய்தேன். சாஸ்த்ர விரோதமில்லாமல் போகத்தையும் கொஞ்சம் அனுபவித்தேன். பிறகு தத்வத்தை உணர்ந்து ஸந்யாஸ ஆச்ரமத்தை கைக் கொண்டேன். ஸந்யாஸ ஆச்ரமத்தைக் கைக்கொண்டதால் தாண்ட முடியாத ஸம்ஸாரம் என்னும் ஸமுத்ரத் தைத் தாண்டினேன். காசியில் க்ஷேத்ர ஸந்யாஸம் பூண்டேன். இம்மாதிரி கிருதக்ரு த்யனுகிவிட்டேன். எனக்கு என்ன தாம் ஹித்திக்கவில்ஜல?

**க்ஷேத்ர ஸந்யாஸம்:** காசி க்ஷேத்திரத்தில் காசி எல்ஜலயை விட்டு எக்கார ணம் பற்றியும் அகலுவதில்ஜல என்று பிரமாணம் செய்து காசியிலேயே வசிப்பதற்கு க்ஷேத்ர ஸந்யாஸம் என்று பெயர். இதைத்தான் கவி குறிப்பிடுகிறுர். க்ஷேத்ர ஸந்யாஸம் என்னும் தர்மத்தை ஸந்யாஸிகள் மட்டுமல்ல, கிருஹஸ்தர்களும் பெண்டிரும் எல்லோரும் கைக்கொள்ளலாம். இக்காலம் வரையிலும் இந்தத் தர்மம் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

**ईर्ष्यायै परवादिनां कविकलाकान्ता यतिं मामियं**
**यच्चुम्बत्यधुनापि तन्मयि भवत्यब्रह्मचर्यं न किम् ।**
**एतावत्स्खलितं क्षमस्व भगवन् भूयोऽपि तुभ्यं शपे**
**श्रीविश्वेश्वर देव नैव भवितास्म्यस्या रहस्यातिथिः ॥ ५३ ॥**

**ஈர்ஷ்யாயை பரவாதி³னும் கவிகலாகாந்தா யதிம் மாமியம்**
**யச்சும்ப³த்யது⁴னபி தன்மயி ப⁴வத்யப்³ரஹ்மசர்யம் ந கிம் ।**
**ஏதாவத்ஸ்க²லிதம் க்ஷமஸ்வ ப⁴க³வன் பூ⁴யோ(அ)பி துப்⁴யம் ஶபே**
**ஸ்ரீவிஶ்வேஶ்வர தே³வ நைவ ப⁴விதாஸ்ம்யஸ்யா ரஹஸ்யாதிதி²꞉ ॥ 53 ॥**

**परवादिनां ईर्ष्यायै** = எதிரிகளின் பொறாமைக்குக் காரணமாக,
**பரவாதி³னும் ஈர்ஷ்யாயை**
**इयं कवि-कला-कान्ता** = இந்தக் கவித்வம் என்கிற காதலி,
**இயம் கவி-கலா-காந்தா**
**यतिं माम् अधुनापि चुम्बति** = ஸந்நியாஸியான என்னையும் இப்பொழுதும்
**யதிம் மாம் அது⁴னாபி சும்ப³தி** முத்தம் கொடுக்கிறள்,
**मयि** = என்னிடத்தில்,
**மயி**
**तत्** = அது,
**தத்**
**अब्रह्मचर्यं किं न भवति** = பிரம்மசர்யத்தை விட்டமாதிரி
**அப்³ரஹ்மசர்யம் கிம் ந ப⁴வதி** ஆகவில்லையா என்ன?
**एतावत् स्खलितं क्षमस्व** = இந்த வழுவுதலை மட்டும் பொறுத்துக்
**ஏதாவத் ஸ்க²லிதம் க்ஷமஸ்வ** கொள்ளும்,
**हे भगवन्** = ஏ பகவன்!
**ஹே ப⁴க³வன்**
**हे देव** = ஏ ஸ்வாமி!
**ஹே தே³வ**
**हे विश्वेश्वर** = ஏ விச்வேச்வர!
**ஹே விஶ்வேஶ்வர**
**अस्या रहस्यातिथिः** = கவிகலை என்னும் இந்தக் காதலிக்கு
**அஸ்யா ரஹஸ்யாதிதி²꞉** ரகஸ்யமான அதிதியாகக்கூட,
**नैव भवितासिम** = இனி ஆகமாட்டேன் (என்று)
**நைவ ப⁴விதாஸிம**
**तुभ्यं** = உமக்கு,
**துப்⁴யம்**

**भूयोऽपि** = மறுபடியும்,

**பூ⁴யோ(அ)பி**

**शपे** = சபதம் செய்கிறேன்.

**ஶபே**

காவியம் இயற்றுவதை, கவிதா யற்றுவதை, கவிதா என்னும் வநிதையான வள் கவியை ஆலிங்கனம் செய்துகொள்வதாகச் சொல்வது வழக்கம். அப்படி, ஸந்யாஸியான பிறகும் தீனுக்ரந்தன ஸ்தோத்ரம் இயற்றியதால் கவிதை என்னும் மாது ரஹஸ்யத்தில் தன்னுடன்கூடித் தன்னை முத்தம் கொடுத்த மாதிரி ஆகிறது. ஆனல் ஸந்யாஸி பிரம்மசர்யம் அல்லவோ கைக்கொள்ளவேண்டும். ஆகையால் ஏ விச்வேச்வர! உம்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். இனி நான் ஒரு காவியமும் செய்வதில்லை. இந்த தீனுக்ராந்தன ஸ்தோத்ரம் செய்ததை மட்டும் பொறுத்துக் கொள்ளும், என்கிருர் கவி.

**तस्मात् पाण्डित्य निर्विद्य बाल्येन तिष्ठासेत्**

**தஸ்மாத் பாண்டி³த்ய நிர்வித்³ய பா³ல்யேன திஷ்டா²ஸேத்**

என்ற சுருதிப்படி கவி சாஸ்திர காவ்ய பரிசயத்தைக்கூடத்துறக்கின்ருர்.

**नासत्यव्यतिरेकतोऽक्षरमपि प्रायुङ्क्त यद्भारती**
**नैवान्यत्परबाधतो यदसकृत्सं चिन्तितं चेतसा ।**
**नाकृत्यादितरत्र गात्रमतनोचेष्टां यथेष्टं च यत्**
**सर्वत्रापि मया त्वमेव शरणं तत्राश्रितो धूर्जटे ॥ ५४ ॥**

**நாஸத்யவ்யதிரேகதோ(அ)க்ஷரமபி ப்ராயுங்க்த யத்³பா⁴ரதீ**
**நைவான்யத்பரபா³த⁴தோ யத³ஸக்ருத்ஸம் சிந்திதம் சேதஸா ।**
**நாக்ருத்யாதி³தரத்ர கா³த்ரமதனோசேஷ்டாம் யதே²ஷ்டம் ச யத்**
**ஸர்வத்ராபி மயா த்வமேவ ஶரணம் தத்ராஶ்ரிதோ தூ⁴ர்ஜடே ॥ 54 ॥**

**भारती** = வாக்கானது,

**பா⁴ரதீ**

**असत्य-व्यतिरेकतः** = அஸத்யத் தொடர்பில்லாமல்,

**அஸத்ய-வ்யதிரேகதஃ**

**अक्षरम् अपि** = ஒரு அக்ஷரம்கூட,

**அக்ஷரம் அபி**

**यत् न प्रायुङ्क्त** = பிரயோகம் செய்யவில்லை என்பதெதோ

**யத் ந ப்ராயுங்க்த**

**परबाधतः अन्यत्** = பிறருக்குக் கெடுதல் செய்வதைத்

**பரபா³த⁴தஃ அன்யத்** தவிர வேறு எதுவும்,

| | | |
|---|---|---|
| **असकृत्**<br>**அஸக்ருத்** | = | அடிக்கடி, |
| **चेतसा यत् न संचिन्तितं**<br>**சேதஸா யத் ந ஸஞ்சிந்திதம்** | = | மனத்தால் யோஜிக்கப்படவில்லை என்பதெதோ, |
| **अकृत्यात् इतरत् चेष्टां**<br>**அக்ருத்யாத் இதரத் சேஷ்டாம்** | = | அக்ருத்யத்தைத் தவிர வேறு எந்த சேஷ்டையையும், |
| **गात्रं**<br>**கா³த்ரம்** | = | தேகமானது, |
| **यथेष्टं**<br>**யதே²ஷ்டம்** | = | இஷ்டப்பட்டு, |
| **यत् न अतनोत्**<br>**யத் ந அதனோத்** | = | செய்யவில்லை என்பது எதோ, |
| **तत्र सर्वत्रापि**<br>**தத்ர ஸர்வத்ராபி** | = | அந்த எல்லா விஷயங்களிலும், |
| **हे धूर्जटे**<br>**ஹே தூ⁴ர்ஜடே** | = | ஏ தூர்ஜடே! |
| **त्वमेव**<br>**த்வமேவ** | = | நீரே, |
| **शरणं**<br>**ஶரணம்** | = | சரணமாய், |
| **मया आश्रित:**<br>**மயா ஆஶ்ரித:** | = | என்னால் ஆச்ரயிக்கப்பட்டு இருக்கிறீர். |

**धूर्जटिः தூ⁴ர்ஜடி:** பெரிய ஜடா மகுடத்தை உடையவர். சிவனுக்கு உரிய பெயர்.

என் வாக்கானது அஸத்யத்தோடு கலக்காமல் ஒரு அக்ஷரமும் கூடப் பிரயோகம் செய்யவில்லை. என் மனமானது பிறருக்குக் கெடுதலை நினைப்பதைத் தவிர வேறு ஒன்றும் நினைக்கவில்லை. என் தேகத்தால் அக்ருத்யத்தைத் தவிர வேறு யாதொரு சேஷ்டையும் செய்யவில்லை. ஆகையால் தாங்களே இந்த எல்லாவற்றிலும் சரணம். ஹே தூர்ஜடே! நான் உங்களையே சரணமாக அடைகிறேன்.

**ओम् तत् सत्**

**ஓம் தத் ஸத்**

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

**சுபானு வருஷத்திலே**

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தில் வெளியிடும் புத்தகங்கள்

ஒவ்வொரு புத்தகத்திலும் பல படங்கள் உள்ளன.

1. **ஸ்ரீ முகபஞ்ச சதீ**
   தேவநாகரி மூலமும் தமிழ் மொழி பெயர்ப்பும்
   ஸ்ரீ மூக கவி அருளிச்செய்தது. 500 ஸ்லோகங்கள் கொண்டது.
   பல படங்களுடன் கூடியது

2. **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.**
   ஸ்ரீ சங்கர ஸ்ரீ பகவத்பாதர்கள் அருளிய பாஷ்யத்திற்கு தமிழ் அனுவாதம் ஸ்ரீ வே. நாராயணன் எம். ஏ., எம். எல்., எழுதியது.

3. **ஸ்ரீ பஜகோவிந்தம்**
   ஸம்ஸ்க்ருத மூலமும் ஸ்ரீ ஏ.எஸ். நடராஜ அய்யர் பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும்.

4. **ஸ்ரீ ஶ்யாமளா தண்டகம்**
   இதை இயற்றியவர் ஸ்ரீ மகா கவி காளிதாஸன்;
   ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும்.

5. **ஸ்ரீ முகுந்தமாலா**
   ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளியது. ஸாஹித் வல்லப ஸ்ரீ T. ஸிந்தராசார்ய ஸ்வாமிகள் பி.ஏ., பி.எல்., எழுதிய விரிவுரையுடன் கூடியது.

6. **ஸ்ரீ ப்ரச்சோத்தர ரத்ந மாலிகா**
   ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர்கள் இயற்றியதை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் தமிழில் உபதேசித்தது.

7. **ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசம்**
   ஸ்ரீ பகவத் பாதர்கள் இயற்றியது, தமிழ் அனுவாதத்துடன் கூடியது.

8. **ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹமேந்த்ரர்கள்** அருளிய
   **சிவ மானஸிக பூஜா**, **கீர்த்தனங்கள்**, **ஆத்ம வித்யா விலாஸ:** என்னும் நூல்கள் ஸ்ரீ V. நாராயணன் எழுதிய தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன்.